بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

# بَابُ بَدْءِ الوَحْيِ
# مِنْ صَحِيحِ الْبُخَارِيِّ

ترجمه وشرحه باللغة التاملية

عمر شريف عبد السلام

# இறைச்செய்தியின் தொடக்கம்
# ஸஹீஹுல் புகாரி

தமிழாக்கம் & விளக்கம் : உமர் ஷரீஃப்



بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

# இறைச்செய்தியின் தொடக்கம்

## அல்ஜாமிவுல் முஸ்னதுஸ் ஸஹீஹுல் முக்தஸர் மின் உமூரி ரஸூலில்லாஹ் ﷺ வசுனனிஹி வஅய்யாமிஹி

**ரஸூலுல்லாஹ் ﷺ உடைய காரியங்கள், வழிமுறைகள், வாழ்நாள்கள் பற்றி தொகுக்கப்பட்ட சுருக்கமான, சரியான, அறிவிப்பாளர் தொடருடன் கூடிய, மார்க்க சட்ட பாடங்களை உள்ளடக்கிய ஹதீஸ் கிரந்தம்!**

**ஆசிரியர் : முஹம்மது இப்னு இஸ்மாயீல்**
**அபூ அப்தில்லாஹ் அல்புகாரி அல்ஜுஃபி** رحمه الله

தமிழாக்கம் & விளக்கம் : உமர் ஷரீஃப்

பதிப்பாசிரியர் : மவ்லவி இமாமுத்தீன் ஹசனி

بِسۡمِ ٱللَّهِ ٱلرَّحۡمَٰنِ ٱلرَّحِيمِ

# باب بدء الوحي

## من

# الجامع المسند الصحيح المختصر

## من أمور رسول الله ﷺ وسننه وأيامه

تأليف الإمام محمد بن إسماعيل البخاري الجعفي رحمه الله

ترجمه وشرحه عمر شريف بن عبد السلام



குர்ஆன், ஸுன்னாவின் கல்விகளை மன்ஹஜுஸ் ஸலஃப் அடிப்படையில் கற்பதற்கும் பயனுள்ள மார்க்க உரைகளை கேட்பதற்கும் வருகை தாருங்கள்!

www.muftiomar.com

**SUPPORT DAWA AND ISLAMIC BOOK PUBLISHING! GOOGLE PAY / PHONE PE + 91 9884469044**

Published by :



DARUL HUDA

QUALITY ISLAMIC BOOK PUBLISHERS

# 211 (102), 1st Floor, Linghi Street, Mannady, Chennai 600001.

Phone : +91 44 25247866,
Mobile : +91 98401 74121

darulhuda.chennai@gmail.com
www.darulhuda.net

# பதிப்புரை

அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும் நன்றிகளும்! ஸலவாத்தும் ஸலாமும் நமது தூதர் மீதும் மற்றும் அவர்களின் குடும்பத்தார்கள், தோழர்கள் மீதும் நிலவட்டும்.

அஹ்லுஸ் ஸுன்னாவின் தெளிவான, சரியான கொள்கை நூல்களையும் ஹதீஸ் நூல்களையும் அல்குர்ஆன் விரிவுரைகளையும் இன்னும் மார்க்கம் சார்ந்த பல துறைகளின் நூல்களையும் தமிழாக்கம் செய்து தமிழ் உலகிற்கு கொண்டு வரவேண்டும் என்ற நோக்கத்தில் இந்நூலை வெளியிடுகின்றோம்.

இன்னும் பெரிய இமாம்களின் நூல்களை தொடர்ந்து வெளியிட அல்லாஹ் உதவி செய்வானாக!

இமாம் புகாரி ﵀ அவர்களின் ஸஹீஹ் நூலை தமிழாக்கம் செய்து வெளியிட நீண்ட நாள் ஆசைப்பட்டுக் கொண்டிருந்தோம். அதன் தொடக்கமாக முதல் பாடத்தை தமிழாக்கம் செய்து வெளியிடுகிறோம் அல்ஹம்து லில்லாஹ்.

இந்த நூலில் ஹதீஸ்களுக்கு அவற்றில் இருந்து நாம் கற்க வேண்டிய கருத்துக்களையும் படிப்பினைகளையும் தெளிவுப்படுத்தி இருக்கின்றோம். இது பொதுவான வாசகர்களுக்கு நற்பலன் தரும் என்று ஆதரவு வைக்கின்றோம். எங்கள் குறைகளை அல்லாஹ் மன்னிப்பானாக! இதில் நன்மைகள் இருந்தால் அவை அல்லாஹ்வின் புறத்திலிருந்துள்ளதாகும்.

அல்லாஹ்வே எங்களை மன்னித்துவிடு! எங்களிடமிருந்து

ஏற்றுக் கொள்! நீதான் நன்கு செவியுறுபவன், நன்கறிந்தவன்.

தாருல் ஹுதாவிற்கு உதவக்கூடிய சகோதர சகோதரிகள் அனைவருக்கும் அல்லாஹ் தனது ரஹ்மத்தையும் பரக்கத்தையும் ஹிதாயத்தையும் இம்மையில் தருவதோடு மறுமையில் அவனது மன்னிப்பையும் சொர்க்கத்தையும் தந்தருள்வானாக! ஆமீன்.

எங்கள் அழைப்புப் பணி தொடர்ந்து நடை பெற எங்களுக்கு உதவுவாயாக, எங்கள் ரப்பே! உன்னை நம்பி, உன்னையே சார்ந்து, உன் பக்கமே திரும்பி, உன்னிடமே பிரார்த்தித்தவர்களாக இருக்கின்றோம். நீ மகா புகழுக்கும் கீர்த்திக்கும் கண்ணியத்திற்கும் உரியவன். நீதான் எங்கள் இறைவன். உன்னைத்தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாரும் அறவே இல்லை.

அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்.

தாருல் ஹுதா பணியாளன்

உமர் ஷரீஃப் அப்துஸ் ஸலாம்

---------------------

# தாருல் ஹுதா
# அறிமுகம்

எல்லாப் புகழும் அகிலங்களின் இறைவன் அல்லாஹ் ஒருவனுக்கே! இறையருளும் ஈடேற்றமும் நபி முஹம்மது ﷺ அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள், அவர்களைப் பின்பற்றும் அனைவருக்கும் உண்டாகட்டும்.

இஸ்லாமியச் சகோதர சகோதரிகளே!

அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு

தாருல் ஹுதா அறிமுகத்தின் வாயிலாக உங்களைச் சந்திப்பதில் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறோம். இதில் தாருல் ஹுதாவின் நோக்கத்தையும் அதன் பணிகளையும் விவரிப்பதுடன் அதன் இன்றைய தேவையையும் தங்கள் முன் சமர்ப்பிக்கிறோம்.

*அல்லாஹு தஆலா கூறுகிறான்: "இறை நம்பிக்கையுடைய ஆண்களும், இறை நம்பிக்கையுடைய பெண்களும் (தங்களுக்குள்) ஒருவருக்கொருவர் உறுதுணையாக இருக்கின்றனர். அவர்கள், (ஒருவர் மற்றவரை) நன்மை செய்யும்படித் தூண்டியும், பாவம் செய்யாது தடுத்தும், தொழுகையைக் கடைப்பிடித்து, (மார்க்க வரி) ஜகாத்து கொடுத்தும் வருவார்கள். அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கட்டுப்பட்டு நடப்பார்கள். இத்தகையோருக்கு வெகு விரைவில் அல்லாஹ் அருள்புரிவான்..."*

*(அல்குர்ஆன் 9:71)*

*மேலும், அல்லாஹு தஆலா கூறுகிறான்: (நம்பிக்கையாளர்களே!) உங்களில் ஒரு கூட்டத்தார் மனிதர்களைச் சிறந்ததின் பக்கம் அழைத்து, நன்மையைச் செய்யும்படி ஏவி, பாவமான காரியங்களில் இருந்து அவர்களை விலக்கிக் கொண்டும் இருக்கட்டும். இத்தகையவர்கள்தாம் வெற்றியாளர்கள். (அல்குர்ஆன் 3:104)*

நபி ﷺ அவர்கள் கூறுகிறார்கள்: உங்களில் யாராவது ஒரு தவறைக் கண்டால் அதை தனது கரத்தால் மாற்றட்டும். அது இயலாவிட்டால் தனது

நாவால் மாற்றட்டும். அதுவும் இயலாவிட்டால் உள்ளத்தால் (வெறுத்து விலகி விடட்டும்). இது ஈமானின் குறைந்தபட்ச அளவாகும்.

**(ஸஹீஹுல் புகாரி)**

மேலும் நபி ﷺ கூறுகிறார்கள்: இறைநம்பிக்கையாளர்கள் தங்களிடையே நேசங்கொள்வதற்கும், கருணை காட்டுவதற்கும், அன்பு செலுத்துவதற்கும் உதாரணம் ஓர் உடலைப் போல! உடலில் ஏதேனும் ஓர் உறுப்பு பாதிக்கப்பட்டால் அனைத்து உறுப்புகளும் காய்ச்சல் மற்றும் தூக்கமின்மையால் முறையிடுகின்றன. **(ஸஹீஹுல் புகாரி)**

இன்று நமது சமுதாயத்தில் சிறியோர் முதல் பெரியோர் வரை பெரும்பாலோர் சரியான மார்க்க ஞானத்திற்கும் முறையான வழிகாட்டலுக்கும் அதிகம் தேவையுள்ளவர்களாக இருப்பதைப் பார்க்கிறோம். ஆகவே, மேற்கூறப்பட்ட குர்ஆன் வசனங்கள் மற்றும் நபிமொழிகளுக்கிணங்க சமுதாய சீர்திருத்தப் பணியில் ஈடுபடுவது மார்க்கக் கடமை என்பதை உணர்ந்து, அல்குர்ஆன் மற்றும் நபிவழியின் அடிப்படையில் அந்த உயர்ந்த பணியை நிறைவேற்றி இறைப்பொருத்தத்தை அடைய வேண்டும் என்ற தூய எண்ணத்தில் தொடங்கப்பட்டதுதான் **தாருல் ஹுதா.**

## பணிகளும் தொண்டுகளும் :

### அழைத்தல் :

இதுவே இஸ்லாமின் அடிப்படையாகும். உலகில் இப்பணி இறைத் தூதர்கள் வாயிலாக நிலை நிறுத்தப்பட்டது. இறுதித் தூதர் முஹம்மது ﷺ அவர்களுக்குப் பின் அவர்களுடைய சமுதாயத்தினர் அனைவரின் மீதும் இப்பணி கடமையாக்கப்பட்டது. மேன்மைமிகு குர்ஆனும், சிறப்புமிகு நபி மொழியும் இதன் அவசியத்தை நமக்கு வலியுறுத்துகின்றன. இதற்கிணங்க இயன்ற அளவு அனைத்து வழிகளிலும் மனித சமுதாயத்திற்கு இஸ்லாமை அறிமுகப்படுத்துவதும், அதன் உயர்வுகளை விளங்கச் செய்வதும் தாருல் ஹுதாவின் தலையாயப் பணியாகும்.

### கற்பித்தல் :

இஸ்லாமை அறிய விரும்பும் சிறுவர்கள், வாலிபர்கள், முதியவர்கள், ஆண்கள், பெண்கள் என அனைவருக்கும் மேன்மைமிகு குர்ஆன், சிறப்புமிகு நபிமொழிகளை அவரவர் தகுதிக்கேற்ப கற்றுத் தருவது தாருல் ஹுதாவின் இரண்டாவது முக்கிய பணியாகும்.

**நூல் வெளியிடுதல் :**

மேன்மைமிகு குர்ஆன், சிறப்புமிகு நபிமொழி இவ்விரண்டையும் அடிப்படையாகக் கொண்டு சமுதாயப் பேரறிஞர்களால் அரபி மொழியில் எழுதப்பட்ட நூல்களை தமிழிலும் ஏனைய உலக மொழிகளிலும் மொழியாக்கம் செய்து, அந்நூற்களைச் சலுகை விலையில் மக்களுக்கு வழங்குவது தாருல் ஹுதாவின் மூன்றாவது சிறப்புப் பணியாகும்.

**உதவுதல் :**

அல்லாஹு தஆலாதான் அனைவரின் தேவைகள் அனைத்தையும் நிறைவேற்றுபவன் ஆவான். மிகப்பெரிய வள்ளலாகிய அல்லாஹ், தன் சார்பாக உலகில் ஏழை, எளியோர், நலிந்தோர் ஆகியோரின் துயர் துடைக்கும் வள்ளல் பெருமக்களுக்கு பெரும் வெகுமதிகளை ஈருலகிலும் வழங்குவதாக வாக்களித்துள்ளான். பிறர் துன்பங்களில் பங்கெடுப்பது, பிறர் தேவைகளை நிறைவேற்ற இயன்றவரை உதவுவது முஸ்லிம்களுடைய அடிப்படைப் பண்புகளாகும். இவ்வுன்னத தப் பணிக்காக **பைத்துல்மால்** (பொது நிதி) ஏற்பாடு செய்து இரக்கச் சிந்தனையும், மார்க்கப்பற்றும் கொண்ட வள்ளல் பெருமக்களிடமிருந்து கடமையான, உபரியான தர்மங்களைப் பெற்று தேவையுடையோருக்கு உதவுதல் தாருல் ஹுதாவின் நான்காவது பணியாகும்.

மேற்கூறிய பணிகளைத் தவிர, இஸ்லாம் முழுமையாக ஒவ்வொருவரின் வாழ்விலும் வரவேண்டும் என்பதற்காகவும், மனிதச் சமுதாயங்களுக்குள் நல்லுறவும், அன்பும், கருணையும், சமூக புரிந்துணர்வும் ஏற்பட வேண்டும் என்பதற்காகவும் இயன்றவரை அல்லாஹ்வுக்காக தொண்டாற்ற வேண்டும் என்பது தாருல் ஹுதாவின் குறிக்கோளாகும்.

இப்பணிகள் அனைத்தும் தொய்வின்றி தொடர்ந்து சிறப்பாக, திறம்பட நடைபெறவும், அவற்றை அல்லாஹ் அங்கீகரிக்கவும் தாங்கள் துஆ செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்வதுடன் தங்களால் இயன்றவரை இப்பணிகளில் பங்கு பெறவும் அழைக்கிறோம்.

பேராற்றலுடைய அல்லாஹ்விடமே உதவி தேடுகிறோம்! அவனையே முன்னோக்கி நிற்கிறோம்!!

உங்களால் முடிந்த உதவிகளை அல்லாஹ்வின் பொருத்தம் நாடி தந்துதவுங்கள்.

***நன்மையான காரியங்களில் எவற்றை நீங்கள் உங்களுக்காக (மரணம் வருவதற்கு) முன்னதாகவே செய்து கொள்கிறீர்களோ அவற்றை அல்லாஹ்விடத்தில் மிகச் சிறந்ததாகவும், மகத்தான கூலியாகவும் பெற்றுக் கொள்வீர்கள். (அல்குர்ஆன் 73 : 20)***

அல்லாஹ் தங்களுக்கு நற்கூலி வழங்குவானாக!

---------------------

بَابُ بَدْءِ الوَحْيِ

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيمِ

# பாடம் (1) : வஹ்யி - இறைச்செய்தியின் தொடக்கம்

பேரருளாளன் பேரன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...

قَالَ الشَّيْخُ الْإِمَامُ الْحَافِظُ أَبُو عَبْدِ اللّٰهِ مُحَمَّدُ بْنُ إِسْمَاعِيلَ بْنِ إِبْرَاهِيمَ بْنِ الْمُغِيرَةِ الْبُخَارِيُّ رَحِمَهُ اللّٰهُ تَعَالَى آمِينَ:

அஷ்ஷைக் அல் இமாம் அல் ஹாஃபிள் அபூ அப்தில்லாஹ் முஹம்மது இப்னு இஸ்மாயீல் இப்னு இப்ராஹீம் இப்னு அல் முகீரா அல் புகாரி கூறுகிறார் : அல்லாஹ் அவர் மீது கருணை புரிவானாக! ஆமீன்!

كَيْفَ كَانَ بَدْءُ الوَحْيِ إِلَى رَسُولِ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ؟

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுக்கு இறைச்செய்தி வந்ததன் தொடக்கம் எப்படி இருந்தது?

وَقَوْلُ اللّٰهِ جَلَّ ذِكْرُهُ: ﴿إِنَّا أَوْحَيْنَا إِلَيْكَ كَمَا أَوْحَيْنَا إِلَى نُوحٍ وَالنَّبِيِّينَ مِنْ بَعْدِهِ﴾ النساء: ١٦٣

இன்னும் அல்லாஹ் **جَلَّ ذِكْرُهُ** ஜல்ல திக்ருஹு (-அவனுடைய நினைவு மிகவும் கண்ணியம் மிக்கது) உடைய கூற்று :

﴿إِنَّا أَوْحَيْنَا إِلَيْكَ كَمَا أَوْحَيْنَا إِلَى نُوحٍ وَالنَّبِيِّينَ مِنْ بَعْدِهِ﴾

பொருள் : (நபியே!) நூஹுக்கும், அவருக்குப் பின்னர் (வந்த) நபிமார்களுக்கும் நாம் வஹ்யி அறிவித்தது போன்றே உமக்கும் நிச்சயமாக நாம் வஹ்யி அறிவித்தோம். (அல்குர்ஆன் 4 : 163)

## விளக்கம்

ஆசிரியர் தமது நூலில் முதல் பாடமாக இதை அமைத்துள்ளார். இவ்வளவு மகத்தான ஒரு ஹதீஸ் நூலின் முதல் பாடமாக இதை அமைத்ததின் காரணமாவது : நேர்வழியான இஸ்லாமிற்கும் வழிகெட்ட பிற கொள்கைகளுக்கும் நடுவில் முதல் வித்தியாசம் வஹ்யி ஆகும். அதாவது, இஸ்லாம் என்பது அகிலங்களின் இறைவனாகிய அல்லாஹ்விடமிருந்து வஹ்யி மூலமாக மனித குலத்திற்கு கிடைக்கப் பெற்ற மார்க்கமாகும். பிற கொள்கைகள் எல்லாம் மனிதர்களின் சுய சிந்தனையில், கற்பனையில் உதித்தவை ஆகும். அல்லாஹு தஆலா தனது வஹ்யை தனது அடியார்களில் தான் நாடிய நல்லவர்களுக்கு இறக்குகிறான். வஹ்யின் தொடர்ச்சியாகவும் இறுதியாகவும் இறுதி நபியான முஹம்மது ﷺ அவர்களுக்கு அல்லாஹ் வஹ்யி அறிவித்தான். இதன் மூலம் நபியவர்களின் ஹதீஸ்களை நாம் படிப்பதற்கு முன்பாக நபியவர்களின் நுபுவ்வத்தை உறுதி செய்கின்ற வசனத்தை ஆசிரியர் பதிவு செய்கிறார். முஹம்மது ﷺ அவர்கள் அல்லாஹ்வின் நபி ஆவார்கள். அவர்களுக்கு அல்லாஹ் வஹ்யி இறக்கினான். அவர்கள் நபிமார்களின் வரிசையில் வந்தவர்கள். ஆகவே இந்த நபியை ஏற்றுக் கொள்வதும்

அவர்களை பின்பற்றுவதும் அவர்கள் காண்பிக்கும் வழியில் நடப்பதும் நமக்கு வெற்றியாகும். அவர்களை நிராகரிப்பது, அவர்களை பின்பற்றாமல் இருப்பது வழிகேடும் நஷ்டமும் ஆகும். இன்னும் மேற் குறிப்பிட்ட வசனத்தில், உமக்கு முன்னர் அனுப்பப்பட்ட நபிமார்களுக்கு வஹ்யி இறக்கியது போன்று நாம் உமக்கு வஹ்யி இறக்கினோம் என்று அல்லாஹ் கூறி இருப்பதில் நபி முஹம்மது ﷺ அவர்கள் இறுதி நபி என்ற அறிவிப்பும் சுட்டிக் காட்டுதலும் இருக்கிறது. ஏனெனில், நபி ﷺ அவர்களுக்கு பின்னரும் நபிமார்கள் வருவார்கள் என்று இருப்பின், உமக்கு முன்னர் அனுப்பப்பட்ட நபிமார்களுக்கு வஹ்யி இறக்கியது போன்றும் இன்னும் அடுத்து வரும் நபிமார்களுக்கு வஹ்யி இறக்கப்போவது போன்றும் நாம் உமக்கு வஹ்யி இறக்கி இருக்கிறோம் என்று அல்லாஹ் கூறி இருப்பான். இன்னும் நபி ﷺ அவர்களின் வருகையை குறித்து அக்கால காஃபிர்கள் ஆச்சரியப்பட்ட போது, அதை மறுத்து இனி வரும் காலங்களிலும் இன்னும் பல நபிமார்களை நான் அனுப்புவேன் என்று அல்லாஹ் வசனம் இறக்கி இருப்பான். எப்படி ஈசா நபி عليه السلام அவர்கள் நமது நபியைப் பற்றி முன்னறிவிப்பு செய்தார்களோ அது போன்று. ஆனால், குர்ஆனில் எந்த ஓர் இடத்திலும் இந்த நபிக்குப் பின்னர் ஒரு நபி வருவார் என்ற செய்தி அறவே இல்லை. அது மட்டுமல்லாமல், இவர்கள்தான் நபிமார்களின் முத்திரை, இறுதி நபி என்று அல்லாஹ் வரையறுத்து முடிவாக கூறிவிட்டான்.

﴿مَا كَانَ مُحَمَّدٌ أَبَا أَحَدٍ مِنْ رِجَالِكُمْ وَلَٰكِنْ رَسُولَ اللَّهِ وَخَاتَمَ

النَّبِيِّينَ وَكَانَ اللّٰهُ بِكُلِّ شَيْءٍ عَلِيمًا ۝﴾

(நம்பிக்கையாளர்களே!) உங்களிலுள்ள ஆண்களில் ஒருவருக்கும் முஹம்மது (நபி அவர்கள்) தந்தையாக இருக்க வில்லை. (ஆகவே, அவர் ஜைதுக்கு எவ்வாறு தந்தையாவார்?) எனினும், அவர் அல்லாஹ்வுடைய தூதராகவும், நபிமார்களுக்கு (இறுதி) முத்திரையாகவும் (இறுதி நபியாகவும்) இருக்கிறார். (ஆகவே, அவருக்குப் பின்னர் யாதொரு தூதரையும் அனுப்பமாட்டான்.) அல்லாஹ் அனைத்தையும் நன்கறிந்தவனாக இருக்கின்றான்.

(அல்குர்ஆன் 33 : 40)

ஆகவே, இந்த ஸஹீஹ் நூலின் முதல் பாடத்தின் முதல் வசனத்தின் வாயிலாக ஆசிரியர் சுட்டிக்காட்டுவது என்னவென்றால்,

1. முஹம்மது ﷺ அவர்களின் நபித்துவத்தை உறுதி செய்தல்,

2. அவர்கள் இறுதி நபி என்பதை உறுதி செய்தல்,

3. அவர்களுக்கு இந்த மார்க்கத்தை அல்லாஹ் வஹ்யி மூலம் கொடுத்தான் என்பதை உறுதி செய்தல்,

4. நபி ﷺ அவர்களின் ஹதீஸ்களும் அல்லாஹ்வின் புறத்திலிருந்து கொடுக்கப்பட்ட வஹ்யி ஆகும் என்பதை உறுதி செய்தல்.

5. ஆகவே, குர்ஆனுக்கு கீழ்ப்படிவது போன்று நபி ﷺ அவர்களின் ஹதீஸுக்கு கீழ்ப்படிய வேண்டும் என்பதை உறுதி

செய்தல்,

6. குர்ஆனில் சந்தேகிப்பது எப்படி நிராகரிப்பாக ஆகுமோ, அவ்வாறே ஸஹீஹான ஹதீஸ்களை சந்தேகிப்பதும் நிராகரிப்பாக ஆகும் என்பதை உறுதி செய்தல்,

7. நபி ﷺ அவர்களின் ஹதீஸுக்கு கீழ்ப்படிவது அல்லாஹ்வுக்கு கீழ்ப்படிவதாகும் என்பதை உறுதி செய்தல்.

ஏனெனில், அல்லாஹ்வின் பேச்சாகிய குர்ஆன்தான் இவர்களை நபி என்று உறுதி செய்கிறது; இன்னும் நபி ﷺ அவர்களுக்கு கீழ்ப்படிந்து நடந்தால் வெற்றி என்றும் அவர்களுக்கு கீழ்ப்படியாவிட்டால் தோல்வியும் நாசமும் வழிகேடும் என்று எச்சரிக்கை செய்கிறது. இந்த கருத்தை அல்குர்ஆன் ஒன்றுக்கு மேற்பட்ட பல இடங்களில் வலியுறுத்துவதை பார்க்கலாம்.

அல்லாஹு தஆலா கூறுகிறான் :

**﴿فَلَا وَرَبِّكَ لَا يُؤْمِنُونَ حَتَّىٰ يُحَكِّمُوكَ فِيمَا شَجَرَ بَيْنَهُمْ ثُمَّ لَا يَجِدُوا فِي أَنْفُسِهِمْ حَرَجًا مِمَّا قَضَيْتَ وَيُسَلِّمُوا تَسْلِيمًا﴾**

(நபியே) உங்கள் இறைவன் மீது சத்தியமாக! அவர்கள் தங்களுக்குள் ஏற்பட்ட சச்சரவில் உங்களை நீதிபதியாக நியமித்து நீங்கள் செய்யும் தீர்ப்பை தங்கள் மனதில் எத்தகைய அதிருப்தியுமின்றி முற்றிலும் ஏற்காத வரையில் அவர்கள் (உண்மை) நம்பிக்கையாளர்களாக ஆக மாட்டார்கள். (அல்குர்ஆன் 4:65)

﴿وَمَا كَانَ لِمُؤْمِنٍ وَلَا مُؤْمِنَةٍ إِذَا قَضَى اللَّهُ وَرَسُولُهُ أَمْرًا أَنْ يَكُونَ لَهُمُ الْخِيَرَةُ مِنْ أَمْرِهِمْ وَمَنْ يَعْصِ اللَّهَ وَرَسُولَهُ فَقَدْ ضَلَّ ضَلَالًا مُبِينًا﴾

அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் யாதொரு விஷயத்தைப் பற்றிக் கட்டளையிட்ட பின்னர், அவ்விஷயத்தில் (அதனைவிட்டு) வேறு அபிப்பிராயம் கொள்வதற்கு நம்பிக்கையாளரான எந்த ஆணுக்கும் பெண்ணுக்கும் உரிமையில்லை. (இவ்விஷயத்தில்) அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் எவரேனும் மாறு செய்தால், நிச்சயமாக அவர்கள் பகிரங்கமான வழிகேட்டிலேயே இருக்கின்றார்கள். (அல்குர்ஆன் 33:36)

﴿مَنْ يُطِعِ الرَّسُولَ فَقَدْ أَطَاعَ اللَّهَ وَمَنْ تَوَلَّى فَمَا أَرْسَلْنَاكَ عَلَيْهِمْ حَفِيظًا﴾

எவர் (அல்லாஹ்வுடைய) தூதருக்கு (முற்றிலும்) கட்டுப்ப(ட்)டு (நடக்)கின்றாரோ அவர் நிச்சயமாக அல்லாஹ்வுக்கே கீழ்ப்படிந்தார். ஆகவே (நபியே! உங்களை) எவனும் புறக்கணித்தால் (அதற்காக நீங்கள் கவலைப்பட வேண்டாம்.) அவர்களை கண்காணிப்பவராக உங்களை நாம் அனுப்பவில்லை. (அல்குர்ஆன் 4:80)

இன்னும் أَطِيعُوا அத்தீஊ - கீழ்ப்படியுங்கள் என்ற ஒரே ஓர் ஏவல் வினைச் சொல்லுக்கு கீழ் அல்லாஹ் தன்னுடன் தனது நபியவர்களையும் சேர்த்து சொல்வதில் அல்லாஹ்வுக்கு

கீழ்ப்படிவதைப் போல் அல்லாஹ் உடைய தூதருக்கும் கீழ்ப்படிய வேண்டும் என்றும், குர்ஆன் உடைய ஏவல் விலக்கல்களை ஏற்று நடப்பதுபோல் ஸஹீஹான ஹதீஸ்களில் வந்துள்ள ஏவல் விலக்கல்களையும் ஏற்று நடக்க வேண்டும் என்றும் தெளிவாக விளங்க முடிகிறது.

அல்லாஹு தஆலா கூறுகிறான் :

﴿قُلْ أَطِيعُوا اللَّهَ وَالرَّسُولَ فَإِنْ تَوَلَّوْا فَإِنَّ اللَّهَ لَا يُحِبُّ الْكَافِرِينَ ۝﴾

(நபியே! மேலும்) நீங்கள் கூறுங்கள் : அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் நீங்கள் கீழ்ப்படியுங்கள். அன்றி நீங்கள் புறக்கணித்தால் நிச்சயமாக அல்லாஹ் நிராகரிப்பவர்களை நேசிப்பதில்லை. (அல்குர்ஆன் 3:32)

8. ஹதீஸ்களை அறிவதற்கு முன்னர் அவற்றின் மீது ஆழ்ந்த பற்றையும் உறுதியான நம்பிக்கையையும் கொண்டுவருவது அவசியம்.

9. ஹதீஸும் அல்லாஹ்வின் புறத்திலிருந்து நபி ﷺ அவர்களுக்கு கொடுக்கப்பட்ட வஹ்யி என்று அறிந்து நம்பிக்கை கொள்ளும்போது மட்டுமே ஹதீஸின் படி அமல் செய்வதில் ஆர்வமும் உண்மையான பற்றுதலும் உள்ளத்தில் ஹதீஸ்கள் மீது மதிப்பும் கண்ணியமும் உண்டாகும்.

10. ஹதீஸை மறுப்பது, அல்லது விமர்சிப்பது, அல்லது அவற்றில்

தவறான வியாக்கியானம் செய்து விளையாடுவது வஹ்யில் விளையாடுவது ஆகும். ஆகவே இது குறித்து எச்சரிக்கை செய்வதும் இதில் இருக்கிறது. அல்லாஹ் மிக அறிந்தவன். அவனிடமே உண்மையான அறிவு இருக்கிறது.

---------------------

## ஹதீஸ் எண் : 1

அறிவிப்பாளர் : உமர் இப்னுல் கத்தாப் ﵁

حَدَّثَنَا الحُمَيْدِيُّ عَبْدُ اللهِ بْنُ الزُّبَيْرِ، قَالَ: حَدَّثَنَا سُفْيَانُ، قَالَ: حَدَّثَنَا يَحْيَى بْنُ سَعِيدٍ الأَنْصَارِيُّ، قَالَ: أَخْبَرَنِي مُحَمَّدُ بْنُ إِبْرَاهِيمَ التَّيْمِيُّ، أَنَّهُ سَمِعَ عَلْقَمَةَ بْنَ وَقَّاصٍ اللَّيْثِيَّ، يَقُولُ: سَمِعْتُ عُمَرَ بْنَ الخَطَّابِ رَضِيَ اللهُ عَنْهُ عَلَى المِنْبَرِ قَالَ: سَمِعْتُ رَسُولَ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ: «إِنَّمَا الأَعْمَالُ بِالنِّيَّاتِ، وَإِنَّمَا لِكُلِّ امْرِئٍ مَا نَوَى، فَمَنْ كَانَتْ هِجْرَتُهُ إِلَى دُنْيَا يُصِيبُهَا، أَوْ إِلَى امْرَأَةٍ يَنْكِحُهَا، فَهِجْرَتُهُ إِلَى مَا هَاجَرَ إِلَيْهِ»

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூற நான் செவியுற்றேன் : செயல்கள் எல்லாம் எண்ணங்களைக் கொண்டுதான் (முடிவு செய்யப்படுகின்றன). ஒவ்வொரு மனிதனுக்கும் அவன் மனதில் எண்ணியதுதான் கிடைக்கும். ஆகவே, யாருடைய ஹிஜ்ரத் உலகத்தை அடைவதற்காக இருக்குமோ, அல்லது ஒரு பெண்ணை திருமணம் செய்வதற்காக இருக்குமோ ஆக, அவரின் ஹிஜ்ரத் அவர் எதற்காக ஹிஜ்ரத் செய்தாரோ அற்காகவே இருக்கும்.

### விளக்கம்

நாம் செய்யக்கூடிய செயல்கள் நமது எண்ணங்களுக்கு ஏற்ப அல்லாஹ்விடம் நன்மைக்குரியதாக அல்லது தண்டனைக்குரியதாக அமையப் பெறுகின்றன. மார்க்கம்,

மறுமைக்காக கற்பித்துக் கொடுத்த அமல்களைக் கொண்டு அல்லாஹ்வின் திருமுகம் மட்டுமே நாடப்படவேண்டும். அல்லாஹ்வின் பொருத்தத்தையும் சொர்க்கத்தையும் மட்டுமே நாடி நல்லமல்களை செய்ய வேண்டும்.

மாறாக, யார் மறுமைக்கான அமல்களை உலகாதாயத்தை அடைவதற்கு செய்வாரோ அவர் அந்த உலகாதாயத்தை மட்டுமே அடைவார். மறுமையில் அவர் நற்கூலியை அடைய மாட்டார்.

ஹிஜ்ரத் என்றால் அரபி அகராதியில் விடுவது, ஒதுக்குவது, வெறுப்பது, ஓர் ஊரை விட்டு வேறு ஓர் ஊரில் குடிபெயர்வது ஆகும். மார்க்கத்தில் ஹிஜ்ரத் என்றால் அல்லாஹ் உடைய சட்டங்களை பின்பற்ற முடியாத ஊரை விட்டுவிட்டு அல்லாஹ் உடைய சட்டங்களை பின்பற்றுவதற்கு அனுமதியுள்ள நாட்டுக்கு சென்று குடி அமர்வதற்கு சொல்லப்படும்.

இஸ்லாமிய மார்க்கத்தில் ஆரம்ப கால கட்டத்தில் மக்காவிலிருந்து மதீனாவிற்கு ஹிஜ்ரத் செய்வது கட்டாயக் கடமையாக இருந்தது. பிறகு மக்கா வெற்றிக் கொள்ளப்பட்ட பிறகு அது நீக்கப்பட்டது.

## தலைப்புக்கும் ஹதீஸுக்கும் இடையில் உள்ள தொடர்புகள்

அபூ அப்தில் மலிக் அல்பவ்னி கூறுவதாக இப்னு ஹஜர் ஃபத்ஹுல் பாரியில் எழுதுகிறார் : நபி ﷺ அவர்களுக்கு வஹ்யி உடைய வருகை நபி ﷺ அவர்களின் நிய்யத் - எண்ணத்தின் அடிப்படையில் அமைந்திருந்தது.

நபி ﷺ அவர்களை அல்லாஹு தஆலா இயற்கையிலேயே ஏகத்துவத்தின் மீது பிறக்க வைத்திருந்தான். சிலைகள் மீது அவர்களின் உள்ளத்தில் வெறுப்பை அல்லாஹ் ஏற்படுத்தி இருந்தான். நபித்துவத்திற்கு காரணமாக அமைந்த உண்மையான கனவுகளை அல்லாஹ் அவர்களுக்கு வழங்கினான். தமது கனவுகள் உண்மையாக நிகழ்வதை கண்ணுற்ற நபி ﷺ அவர்கள் அல்லாஹ்வின் பக்கம் தன்னை முழுமையாக, கலப்பற்ற முறையில் ஈடுபடுத்திக் கொண்டார்கள்.

அல்லாஹ்வை வணங்கி வழிபட தனிமையை தேடி ஹிரா குகைக்கு சென்று தங்களானார்கள். ஆகவே, அல்லாஹ் நபி ﷺ அவர்களின் அமலை ஏற்றுக் கொண்டு அவர்களுக்கு தனது அருளை முழுமைப்படுத்தினான்.

இப்னுல் முனீர் அவர்கள் கூறுவதாக இப்னு ஹஜர் எழுதுகிறார் : நபி ﷺ அவர்களின் நபித்துவத்தின் முதல் தொடக்கம் அவர்கள் அல்லாஹு தஆலாவின் பக்கம் ஹிஜ்ரத் செய்தார்கள். ஹிரா குகையில் அல்லாஹ்வை வணங்குவதற்காக தனிமையில் இருக்க தன்னை அங்கே ஒதுக்கிக்கொண்டார்கள். ஆகவே, வஹ்யின் தொடக்கம் என்ற தலைப்பின் கீழ் இந்த ஹதீஸை இமாமவர்கள் கொண்டு வந்துள்ளார்கள்.

மேலும், இப்னு ஹஜர் கூறுகிறார் : நமக்கு முன் இருக்கும் இந்த கிரந்தம் சுன்னா என்ற வஹ்யை ஒருங்கிணைப்பதற்காக வைக்கப்பட்டதாகும். ஆகவே, வஹ்யின் தொடக்கம் எப்படி

இருந்தது என்ற பாடத்தை இமாமவர்கள் முதலாவதாக அமைத்தார்கள். அல்லாஹ்விடமிருந்து வரக்கூடிய வஹ்யி உடைய நோக்கம், நாம் செய்யவேண்டிய அமல்களை நமக்கு விவரித்து கூறுவதாகும். ஆகவே, அந்த அமல்கள் எல்லாம் சரியாக ஆகுவதற்குரிய முக்கியமான அடிப்படை எதுவோ அதை முதல் ஹதீஸாக இமாமவர்கள் கொண்டு வந்துள்ளார்கள்.

இப்னு ஹஜர் கூறுகிறார் : இந்த ஹதீஸை குறித்து இமாம்கள் பலர் மிகவும் உயர்வாக சிலாகித்து கூறி இருக்கின்றார்கள். சிலர், இந்த ஹதீஸை விட மிகப் பயனுள்ள, மிகவும் நிறைவான ஹதீஸ் வேறு ஏதும் இல்லை என்று கூறி இருக்கின்றார்கள்.

இன்னும் சிலர், இஸ்லாமின் மூன்று அடிப்படைகளில் இந்த ஹதீஸ் ஒன்றாகும் என்று கூறி இருக்கின்றார்கள். மற்ற இரண்டுகளாவன: ஒன்று, நாம் கட்டளை இடாத காரியத்தை ஒருவர் செய்தால் அது மறுக்கப்பட்டதாகும். மற்றொன்று, ஹலால் தெளிவானது, ஹராமும் தெளிவானது. அவ்விரண்டுக்கும் இடையில் சந்தேகமான பல விஷயங்கள் உள்ளன. (இந்த இரண்டும் ஸஹீஹான நபிமொழிகளாகும்.)

இன்னும் சிலர் இந்த ஹதீஸை எல்லாப் பாடங்களிலும் முதலாவதாக கூற வேண்டும் என்று கூறி இருக்கின்றார்கள்.

இப்னு பத்தால் கூறுகிறார் : முன் சென்ற நபிமார்களுக்கு அனுப்பிய ரிசாலத் - தூதுத்துவத்தின் வஹ்யைதான் அல்லாஹ் நபி முஹம்மது ﷺ அவர்களுக்கும் இறக்கினான் என்பதை ஆசிரியர் பாடத்தில் கூறப்பட்டுள்ள (4 : 163) வசனத்தின்

மூலம் தெளிவுப்படுத்தினார். ஏனெனில், வஹ்யில் பல வகைகள் உள்ளன. நபி ﷺ அவர்களுக்கு கொடுக்கப்பட்ட வஹ்யி, அவர்களை மக்களுக்கு அல்லாஹ்வின் தூதராக ஆக்குவதற்காக கொடுக்கப்பட்ட வஹ்யி ஆகும். இன்னும் ஆசிரியர், தன் சார்பாக ஒரு முன்னுரையை நூலுக்கு எழுதாமல் நபி ﷺ அவர்களின் நிய்யத் தொடர்பான ஹதீஸை ஒரு முன்னுரைப் போன்று பதிவு செய்கிறார். காரணம், இந்த நூலை, தான் எழுதுவதுடைய நோக்கம் அல்லாஹ்வின் திருமுகத்தை நாடி மட்டுமே. அவ்வாறே இந்த நூலை படிப்பவர்களும் அல்லாஹ்வின் திருமுகம் நாடி மட்டும் இந்த நூலை படிக்க வேண்டும் என்று ஆசிரியர் சுட்டிக் காட்ட விரும்புகிறார்கள்.

## படிப்பினைகள்

1. நாம் அமல்களை செய்வதற்கு முன்னர் நமது எண்ணங்களை சரி செய்து கொள்ள வேண்டும்.

2. அல்லாஹ்விற்காக என்று மனத்தூய்மையுடன் செய்யப்படும் அமல்கள் மட்டுமே அல்லாஹ்விடம் ஏற்றுக் கொள்ளப்படும்.

3. தீய எண்ணங்கள், நல்லமல்களை நன்மையற்றதாக மாற்றிவிடும்.

4. பாவமான செயல்ககளை நல்ல எண்ணங்கள் நன்மையாக மாற்றது. தவறான செயலை செய்த மனிதர், நான் அந்த செயலை நல்ல எண்ணத்துடன்தான் செய்தேன் என்று நியாயம் கூற முடியாது.

5. நல்லமல்களை செய்யும்போது மக்களிடம் பெயர், புகழை

விரும்புவது, கண்ணியத்தை எதிர்பார்ப்பது அந்த அமல்களின் நன்மைகளை நமக்கு இழக்கச் செய்துவிடும். அத்துடன் அந்த எண்ணத்தால் ரியா - முகஸ்த்துதி என்ற பாவத்தை செய்தவனாக ஆகிவிடுவான். ரியா என்பது தண்டனைக்குரிய பாவமாகும்.

6. மறுமைக்காக செய்யப்படுகின்ற அமல்களைக் கொண்டு உலகாதாயத்தை விரும்புவதும் அதை தேடுவதும் எதிர்பார்ப்பதும் மிகவும் கேவலமான, இழிவான செயலாகும்.

7. பலர், நாம் பார்ப்பதற்கு நல்லமல்களை செய்பவர்களாக தோன்றும். ஆனால், அவர்களின் எண்ணம் சரியாக இல்லாததால் அவர்களின் அமல்கள் அல்லாஹ்விடம் மறுக்கப்பட்டு விடும்.

8. நல்லமல் செய்பவர்கள் மனிதர்களின் புகழையோ, உலக செல்வத்தையோ, வேறு எந்த இலாபத்தையோ நோக்கமாக ஆக்காமல் இருக்க வேண்டும்.

9. நாம் செய்யக்கூடிய அமல் அல்லாஹ்வின் மார்க்கத்தில் நமக்கு கற்பிக்கப்பட்ட செயலாகவும் இருக்க வேண்டும். பிறகு, அதை நாம் செய்யும்போது நமது எண்ணமும் அல்லாஹ்விற்காக என்று தூய எண்ணமாக இருக்க வேண்டும். அப்போதுதான் நமது அமல்களுக்கு அல்லாஹ்விடம் நற்கூலி கிடைக்கும்.

10. அல்லாஹ்வின் முகம் நாடப்படாத, மறுமை மட்டும் நாடப்படாத எந்த நல்ல காரியமும் அல்லாஹ்விடம் நற்கூலிக்கு தகுந்ததாக இருக்காது.

11. ஸலஃப் - சான்றோர் பலரிடமிருந்து இமாம் தபரி கூறுவதாக இப்னு ஹஜர் எழுதுகிறார் : ஒருவர் ஒரு அமலை செய்யும்போது எண்ணம் அல்லாஹ்விற்காக மட்டும் என்று சரியாக, தூய்மையாக இருந்தது. பிறகு அவருக்கு வேறு எண்ணமும் வருகிறது. உதாரணமாக அவரே தனது அமலைக் கொண்டு பெருமைப்பட்டுக்கொள்கிறார். இப்படியாக வேறு சில எண்ணங்கள் உள்ளத்தில் வருகின்றன. இப்போது இவருக்கு இவருடைய அமல் வீணாகிவிடாது. அல்லாஹ் மிக அறிந்தவன.

12. ஆகுமான பல செயல்களை நல்ல எண்ணங்களோடு அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தையும் சொர்க்கத்தையும் நாடி நாம் செய்யும்போது அந்த ஆகுமான பொதுவான செயல்களும் அல்லாஹ்விடம் நல்லறங்களாக மாறிவிடுகின்றன. அல்லாஹ் நமக்கு நற்கூலியை தருகின்றான்.

13. ஒரு நல்ல காரியத்தை செய்யும்போது ஒன்றுக்கும் மேற்பட்ட பல நல்ல எண்ணங்களை நாம் வைப்பதன் மூலமாக நமக்கு ஏராளமான நன்மைகள் கிடைக்கின்றன. உதாரணமாக மஸ்ஜிதுக்கு தொழுகைக்கு செல்லும்போது நாம் பல நல்ல நிய்யத்துகளை நமது மனதில் கொண்டுவரலாம். எப்படி என்றால், நான் யாரை சந்திக்கின்றேனோ அவருக்கு ஸலாம் கூறுவேன். ஏழைகளைப் பார்த்தால் அவர்களுக்கு உதவுவேன். பாதையில் இடையூறு தரும் பொருள்கள் இருந்தால் அவற்றை நான் அகற்றுவேன். இப்படி பல நூறு நல்ல எண்ணங்களை

நாம் மனதில் வைப்பதன் மூலமாக அல்லாஹ்விடம் அளவிலா நன்மைகளை நாம் அடையலாம். இவ்வாறு இமாம் நவவி ரஹிமஹுல்லாஹ் விளக்கம் கூறுகிறார்கள்.

14. கைசேதமும் கவலையும் வருத்தம் நிறைந்த செய்தி என்னவென்றால் மறுமையை அறிந்த மனிதன் மறுமைக்குரிய நல்லமல்களை உலகாதாயத்தை நாடி செய்வதாகும். உலகக் காரியங்களையும் மறுமைக்காக செய்யவேண்டிய முஸ்லிம் மறுமைக்கான அமல்களை உலகாதாயத்தை பெற செய்வது மிகவும் கேவலமான செயலாகும். அல்லாஹ் பாதுகாப்பானாக! ஆமீன்.

15. அல்லாஹ்வின் திரு முகத்தை நாடி ஒரு நல்ல செயலை செய்வதை விட இவ்வுலகில் பேரின்பம் வேறேதும் உண்டோ!

16. மனத்தூய்மையுடன் அல்லாஹ்வின் திருப் பொருத்தத்தை மட்டும் நாம் நாடி ஒரு அமலை செய்யும்போது அந்த அமலை நாம் சரியாக செய்வதற்கும் வாழ் நாளெல்லாம் தொடர்ந்து செய்வதற்கும் அல்லாஹ் நமக்கு அருள் புரிகின்றான். மனத்தூய்மை இல்லாத செயல் சரியாகவும் இருக்காது, அதில் நிரந்தரமும் இருக்காது. மனிதன் சீக்கிரம் சடைவடைந்து அதை விட்டுவிடுவான். அல்லாஹ் பாதுகாப்பானாக! ஆமீன்.

17. இந்த ஹதீஸிலிருந்து அறிஞர்கள் இப்படியும் ஒரு சட்டம் எடுக்கின்றார்கள். அதாவது, **الأمور بمقاصدها** அல் உமூரு பி

மகாஸிதிஹா - காரியங்கள் அவற்றின் நோக்கத்தை வைத்து தீர்மானிக்கப்படுகின்றன. உதாரணமாக ஒருவர் தனது பையில் குர்ஆனையும் விலை உயர்ந்த சில பொருள்களையும் வைத்திருகின்றார். இவர் பயணத்தில் அந்த பையை தனது தலைக்கு கீழ் வைத்து தூங்குகிறார். இவருடைய நோக்கம் தனது பொருளை பாதுகாப்பது. குர்ஆனை இழிவுப்படுத்துவது அல்ல. ஆகவே, இது குற்றமாகாது. இவ்வாறு உஸூலுல் ஃபிக்ஹ் உடைய அறிஞர்கள் கூறுகிறார்கள்.

--------------------

## ஹதீஸ் எண் : 2

حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، قَالَ: أَخْبَرَنَا مَالِكٌ، عَنْ هِشَامِ بْنِ عُرْوَةَ، عَنْ أَبِيهِ، عَنْ عَائِشَةَ أُمِّ المُؤْمِنِينَ رَضِيَ اللَّهُ عَنْهَا، أَنَّ الحَارِثَ بْنَ هِشَامٍ رَضِيَ اللَّهُ عَنْهُ سَأَلَ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ: يَا رَسُولَ اللَّهِ، كَيْفَ يَأْتِيكَ الوَحْيُ؟ فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «أَحْيَانًا يَأْتِينِي مِثْلَ صَلْصَلَةِ الجَرَسِ، وَهُوَ أَشَدُّهُ عَلَيَّ، فَيُفْصَمُ عَنِّي وَقَدْ وَعَيْتُ عَنْهُ مَا قَالَ، وَأَحْيَانًا يَتَمَثَّلُ لِيَ المَلَكُ رَجُلًا فَيُكَلِّمُنِي فَأَعِي مَا يَقُولُ» قَالَتْ عَائِشَةُ رَضِيَ اللَّهُ عَنْهَا: وَلَقَدْ رَأَيْتُهُ يَنْزِلُ عَلَيْهِ الوَحْيُ فِي اليَوْمِ الشَّدِيدِ البَرْدِ، فَيَفْصِمُ عَنْهُ وَإِنَّ جَبِينَهُ لَيَتَفَصَّدُ عَرَقًا

அறிவிப்பாளர் : ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா

ஹாரிஸ் இப்னு ஹிஷாம் ﵁, ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் கேட்டார்: அல்லாஹ்வின் தூதரே! உங்களுக்கு வஹ்யி - இறைச்செய்தி எப்படி வருகிறது? அதற்கு ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் பதில் கூறினார்கள்: சில நேரங்களில் மணியின் சல் சல் என்ற சப்தத்தைப் போன்று வானவர் என்னிடம் வருவார். இந்த வகை வஹ்யி எனக்கு வஹ்யிகளில் மிக கடுமையாக இருக்கும். அவர் (-ஜிப்ரீல்) கூறியதை நான் நன்கு மனதில் பதிய வைத்துக் கொள்வேன். அந்நிலையில் அது என்னை விட்டு தற்காலிகமாக நிறுத்தப்படும். சில நேரங்களில் அந்த வானவர் ஓர் ஆடவராக எனக்கு முன்னால் காட்சிதருவார். அவர் என்னிடம் பேசுவார். அவர் கூறுவதை எல்லாம் நான் நன்கு மனதில் பதிய வைத்துக்

கொள்வேன். (இந்த ஹதீஸை அறிவிக்கின்ற) ஆயிஷா ﵂ கூறுகிறார்கள் : கடுமையான குளிர் நிறைந்த நாளில் வஹ்யி (நபி ﷺ) அவர்கள் மீது இறங்குவதை நான் பார்த்திருக்கின்றேன். பின்னர் அவர்களை விட்டும் அந்த வஹ்யி தற்காலிகமாக நின்றுவிடும். அவர்களின் நெற்றி வியர்வையால் கொட்டும் (-வெட்டப்பட்ட நரம்பிலிருந்து இரத்தம் பீறிட்டு வெளியேறுவதைப் போல).

## தலைப்புக்கும் ஹதீஸுக்கும் இடையில் உள்ள தொடர்பு இன்னும் விளக்கம்

இந்த பாடத்தின் தலைப்போடு இணைத்துக் கூறப்பட்ட குர்ஆன் வசனம், இதற்கு முன்னர் மற்ற நபிமார்களுக்கு எப்படி வஹ்யி இறக்கப்பட்டதோ அப்படித்தான் நபி ﷺ அவர்களுக்கும் வஹ்யி இறக்கப்பட்டது என்பதை உறுதி செய்கின்றது. அதாவது எல்லா நபிமார்களுக்கும் கொடுக்கப்பட்ட மில்லத் - மார்க்கம் ஒன்றுதான். அல்லாஹ் ஒருவனை வணங்குவது, அவனுக்கு இணைவைக்காமல் இருப்பது, நபிமார்களுக்கு கீழ்ப்படிந்து நடப்பது.

அந்த அடிப்படையில், முந்திய நபிமார்களுக்கு வஹ்யை கொண்டுவந்த அதே வானவராகிய ஜிப்ரீல்தான் என்னிடமும் வஹ்யை கொண்டுவந்தார்; வஹ்யி இறங்கும்போது அதன் நிலை எல்லா தூதர்களுக்கும் ஒரே விதமாகத்தான் இருக்கும் என்பதை நபி ﷺ அவர்கள் இந்த ஹதீஸில் விவரித்திருக்கின்றார்கள்.

வஹ்யின் ஆரம்பம் எப்படி இருந்தது என்பதை இதற்கு

அடுத்து வருகின்ற நபிமொழி தெளிவாக விவரிக்கிறது. அதற்கு முன்னதாக, அந்த வஹ்யி நபியின் மீது இறங்கும்போது அது எப்படி இருக்கும், வஹ்யை ஜிப்ரீல் கொண்டுவரும்போது உள்ள நிலை எப்படி இருக்கும், வஹ்யை பெறுகின்ற நபியின் நிலை எப்படி இருக்கும் என்பதைப் பற்றி கூறப்பட்டுள்ள இந்த ஹதீஸை இமாம் புகாரி அவர்கள் இந்த பாடத்தில் பதிவு செய்துள்ளார்கள். அதாவது வஹ்யைப் பற்றி இந்த ஹதீஸ் பேசுவதால் இமாம் புகாரி இந்த ஹதீஸையும் இங்கு பதிவு செய்துள்ளார்கள். இவ்வாறு இப்னு ஹஜர் கூறுகிறார்.

கருத்து : இந்த ஹதீஸில் தன்னிடம் உங்களுக்கு வஹ்யி எப்படி வருகிறது என்று கேட்ட தோழரின் கேள்வியை நபி ﷺ அவர்கள் புரிந்துகொண்டு அவருக்கு தேவையான விளக்கத்தை இந்த பதிலில் கூறுகின்றார்கள். அதாவது, வஹ்யை வானவர் கொண்டுவரும்போது உங்கள் இருவரின் சந்திப்பு எப்படி இருக்கும்? வானவரின் வருகையை நீங்கள் எப்படி அறிவீர்கள்? நீங்கள் வஹ்யை உள்வாங்கும்போது, வானவரிடமிருந்து அதை செவியுறும்போது உங்கள் நிலைமை எப்படி மாறி இருக்கும்? அந்த ஒரு சந்திப்பில் அவர் உங்களிடம் வஹ்யை ஒப்படைத்து விட்டு சென்ற பின்னர் நீங்கள் அதை எந்தளவு மனதில் பதிய வைத்திருப்பீர்கள்? இவ்வாறு பல கேள்விகள் அவரின் ஒரு கேள்விக்குள் இருப்பதை உணர்ந்து நபி ﷺ அவர்கள் அத்தனை கேள்விகளுக்கும் தெளிவான பதில்களை கொடுத்தார்கள்.

## படிப்பினைகள்

1. வானவர், நபி ﷺ அவர்களை நேரடியாக எதார்த்தத்தில்

சந்தித்து வஹ்யை ஒப்படைத்தார்கள்.

2. வானவர் இன்னும் நபியின் சந்திப்பு குர்ஆனுடைய வஹ்யின் விஷயத்தில் விழிப்பில் எதார்த்தமாக இருந்தது. அது ஒரு கனவோ அல்லது கற்பனையோ அல்ல.

3. அல்லாஹ் யாருக்கு நாடுகின்றானோ அவர்களிடம் வானவர்களை அனுப்புகின்றான்.

4. தன்னிடம் வந்தவர் வானவர் என்பதை நபியைத் தவிர வேறு யாராலும் கூற முடியாது.

5. நபிமார்களிடம் வஹ்யை கொண்டு வருகின்ற வானவர் ஜிப்ரீல் அவர்கள் மட்டும்தான்.

6. ஒவ்வொரு முறையும் வானவரின் வருகையின்போது நபி ﷺ அவர்கள் இந்த சிரமங்களை சந்தித்தார்கள்.

7. நபி ﷺ அவர்கள் தமக்கு கற்பிக்கப்பட்ட வஹ்யில் அல்லாஹ் நாடியதைத் தவிர வேறெதையும் மறக்கவில்லை. வஹ்யை புரிவதிலும் அதை நினைவு வைப்பதிலும் பிறருக்கு எடுத்து சொல்வதிலும் நபி ﷺ அவர்கள் மீதும் அல்லாஹ்வின் விசேஷமான கருணையும் கவனிப்பும் இருந்தன. எந்த சூழ்நிலையிலும் நபி ﷺ அவர்களுக்கு வஹ்யி உடைய விஷயத்தில் குழப்பம் ஏற்பட்டதில்லை. நபி ﷺ அவர்களுக்கு சூனியம் வைக்கப்பட்டிருந்த காலகட்டத்திலும் அவர்களுக்கு ஏற்பட்ட மறதி அவர்களின் உடல் சார்ந்த விஷயத்தில் மட்டுமே இருந்தது. வஹ்யில் இருக்கவில்லை. மனைவிமார்களிடம் உறவுகொள்ளாமலே உறவு கொண்டதாக

நினைத்துக் கொள்வார்கள். இந்த மறதிதான் அவர்களுக்கு சூனியத்தின்போது இருந்தது. உறவுகொண்டுவிட்டு உறவு கொள்ளவில்லை என்று அவர்கள் நினைத்தது இல்லை. மேலும் அவர்களுக்கு தொழுகையில் குர்ஆன் ஓதுவதிலோ மக்களுக்கு மார்க்கத்தை போதிப்பதிலோ அவர்களிடம் யாரும் குழப்பத்தை காணவில்லை. ஆகவே, நபி ﷺ அவர்களுக்கு சூனியம் வைக்கப்பட்டதை நபியின் காலத்தில் பலர் அறிந்திருக்க வாய்ப்பில்லை. அவர்களின் மனைவிமார்கள் மட்டும் அறிந்திருந்தார்கள். இன்னும் சிலர் அறிந்திருந்தார்கள். இன்னும் நபி ﷺ அவர்கள் இதை மற்ற தோழர்களிடம் வெளிப்படுத்தாமல் இருந்ததில் பல நன்மைகளும் இருந்தன.

ஒன்று, யூதர்கள் மீது கோபப்பட்டு குற்றம் செய்யாத மற்றவர்கள் மீது முஸ்லிம்கள் தாக்குதல் நடத்திவிடக்கூடாது. மற்றொன்று, இரு சமுதாயங்களுக்குள் பகைமை மூண்டு விடக்கூடாது. மதீனாவில் இருக்கின்ற குற்றம் செய்யாத மற்ற யூதர்கள் முஸ்லிம்களின் வெறுப்புக்கும் கோபத்திற்கும் ஆளாகிவிடக்கூடாது. இப்படி பல நல்லெண்ணங்களால் நபி ﷺ அவர்கள் தனக்கு சூனியம் செய்யப்பட்டதை பகிரங்கப்படுத்தாமல் இருந்திருக்கலாம். இன் ஷா அல்லாஹ் சூனியம் சம்பந்தப்பட்ட ஹதீஸ் வரும்போது அதை மறுப்பவர்களுக்கான விரிவான விளக்கத்தை பார்ப்போம், இன் ஷா அல்லாஹ்.

8. இந்த வஹ்யை அல்லாஹ்விடமிருந்து பெற்றதில் நபி ﷺ அவர்கள் எவ்வளவு உடல் ரீதியான வலிகளை சுமந்திருக்கின்றார்கள்! இது, நபி ﷺ அவர்கள் இந்த மார்க்கத்திற்கு செய்த தியாகமும் அர்ப்பணிப்பும் ஆகும்.

9. ஆகவே, நபி ﷺ அவர்களுக்குரிய கூலி அல்லாஹ்விடம் மிக அதிகமும் மகத்தானதும் ஆகும்.

10. இந்த கேள்வியை கேட்ட நபித்தோழர், அபூ ஜஹ்ல் உடைய உடன்பிறந்த சகோதரர் ஆவார். மக்கா வெற்றியின்போது அவர் இஸ்லாமை ஏற்று சிறப்புற்றார். அதற்கு பின்னர் சிறந்த தோழர்களில் ஒருவராக திகழ்ந்து இஸ்லாமிற்காக பல தியாகங்களை செய்தார். இறுதியில் அவர் ஷாம் நாடு வெற்றிக் கொள்ளப்பட்ட போது அதில் கலந்துகொண்டு வீரமரணம் அடைந்தார்.

11. வஹ்யின் மீது நபித்தோழர்களுக்கு இருந்த கண்ணியமும் மதிப்பும் பற்றும் இந்த ஹதீஸில் தெளிவாகின்றன.

12. அல்லாஹ்வின் தவ்ஃபீக் என்ற அருள் அல்லாஹ் நாடியவர்களுக்கு மட்டுமே கிடைக்கிறது. இரண்டு உடன்பிறந்த சகோதரர்களில் ஒருவர் காஃபிராக இருக்கின்ற நிலையில் போரில் கொல்லப்பட்டு நிரந்தர நரகவாசியாக ஆகிவிடுகின்றார். மற்றொருவர் இஸ்லாமை ஏற்று இஸ்லாமுக்காக போர் செய்து அந்த போரில் இஸ்லாமின் எதிரிகளால் ஷஹீதாக கொல்லப்பட்டு நிரந்தர சொர்க்கவாசியாக ஆகிவிடுகின்றார். நபியின் தோழமையும் அவருக்கு கிடைக்கப்பெற்றது. மார்க்க ஞானம் பெற்றவர்களில் ஒருவராகவும் திகழ்ந்தார். ஷஹீதாகவும் மரணித்தார். இது அல்லாஹ்வின் அருளாகும். அல்லாஹ் தனது அருளை தான் நாடியவர்களுக்கு வழங்குகின்றான். அல்லாஹ்வே! உன் அருளை எங்களுக்கு வழங்குவாயாக!

13. ஸஹாபாக்களுக்கு மார்க்கம் மற்றும் நபி ﷺ அவர்கள்

சம்பந்தப்பட்ட விஷயத்தில் இருந்த அக்கறை இந்த ஹதீஸிலிருந்து தெரியவருகின்றது.

14. இந்த கேள்வியை ஹாரிஸ், நபி ﷺ அவர்களிடம் கேட்டபோது ஆயிஷா அவர்கள் அங்கு இருந்திருக்கலாம். அல்லது ஹாரிஸ் அவர்கள் பிறகு ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அவர்களிடம் இந்த செய்தியை கூறியிருக்கலாம். பெரும்பாலும் ஆயிஷா அவர்கள் அந்த சபையில் பிரசன்னமாகி இருந்து ஹாரிஸ் அந்த கேள்வியை நபி ﷺ அவர்களிடம் கேட்டபோது செவியுற்றார்கள் என்றுதான் சில அறிவிப்புகளின் வாயிலாக தெரிய வருகிறது. இவ்வாறு இப்னு ஹஜர் கூறுகிறார்.

15. ஓர் ஆசிரியர் தனது மாணவர்களுக்கு படிப்பினையாக அமையவேண்டும் என்பதற்காகவும் அவர்கள் கல்வியை மதிக்க வேண்டும் என்பதற்காகவும் மார்க்கத்திற்காக தான் பட்ட சிரமங்களை முகஸ்த்துதி இன்றி அவர்களுக்கு எடுத்துக் கூறுவதில் தவறு இல்லை. அல்லாஹ் மிக அறிந்தவன்.

16. இந்த மார்க்கத்திற்காக நபி ﷺ அவர்களும் ஸஹாபாக்களும் அறிஞர்களும் செய்த தியாகங்களையும் அர்ப்பணிப்புகளையும் நாம் அறிய வேண்டும். அவற்றை படிக்க வேண்டும். அதன் மூலம் நமதுள்ளத்தில் மார்க்கத்தின் மீது மதிப்பும் கண்ணியமும் பற்றும் உருவாகும். நாமும் இந்த மார்க்கத்திற்கு அர்ப்பணிப்பு செய்ய வேண்டும் என்ற எண்ணம் நமக்குள்ளும் வரும். அல்லாஹ் மிக அறிந்தவன்.

--------------------

## ஹதீஸ் எண் : 3

حَدَّثَنَا يَحْيَى بْنُ بُكَيْرٍ قَالَ حَدَّثَنَا اللَّيْثُ عَنْ عُقَيْلٍ عَنْ ابْنِ شِهَابٍ عَنْ عُرْوَةَ بْنِ الزُّبَيْرِ عَنْ عَائِشَةَ أُمِّ الْمُؤْمِنِينَ أَنَّهَا قَالَتْ أَوَّلُ مَا بُدِئَ بِهِ رَسُولُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ مِنْ الْوَحْيِ الرُّؤْيَا الصَّالِحَةُ فِي النَّوْمِ فَكَانَ لَا يَرَى رُؤْيَا إِلَّا جَاءَتْ مِثْلَ فَلَقِ الصُّبْحِ ثُمَّ حُبِّبَ إِلَيْهِ الْخَلَاءُ وَكَانَ يَخْلُو بِغَارِ حِرَاءٍ فَيَتَحَنَّثُ فِيهِ وَهُوَ التَّعَبُّدُ اللَّيَالِيَ ذَوَاتِ الْعَدَدِ قَبْلَ أَنْ يَنْزِعَ إِلَى أَهْلِهِ وَيَتَزَوَّدُ لِذَلِكَ ثُمَّ يَرْجِعُ إِلَى خَدِيجَةَ فَيَتَزَوَّدُ لِمِثْلِهَا حَتَّى جَاءَهُ الْحَقُّ وَهُوَ فِي غَارِ حِرَاءٍ فَجَاءَهُ الْمَلَكُ فَقَالَ اقْرَأْ قَالَ مَا أَنَا بِقَارِئٍ قَالَ فَأَخَذَنِي فَغَطَّنِي حَتَّى بَلَغَ مِنِّي الْجَهْدَ ثُمَّ أَرْسَلَنِي فَقَالَ اقْرَأْ قُلْتُ مَا أَنَا بِقَارِئٍ فَأَخَذَنِي فَغَطَّنِي الثَّانِيَةَ حَتَّى بَلَغَ مِنِّي الْجَهْدَ ثُمَّ أَرْسَلَنِي فَقَالَ اقْرَأْ فَقُلْتُ مَا أَنَا بِقَارِئٍ فَأَخَذَنِي فَغَطَّنِي الثَّالِثَةَ ثُمَّ أَرْسَلَنِي فَقَالَ﴿اقْرَأْ بِاسْمِ رَبِّكَ الَّذِي خَلَقَ ○ خَلَقَ الْإِنْسَانَ مِنْ عَلَقٍ ○ اقْرَأْ وَرَبُّكَ الْأَكْرَمُ○﴾ فَرَجَعَ بِهَا رَسُولُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ يَرْجُفُ فُؤَادُهُ فَدَخَلَ عَلَى خَدِيجَةَ بِنْتِ خُوَيْلِدٍ رَضِيَ اللهُ عَنْهَا فَقَالَ زَمِّلُونِي زَمِّلُونِي فَزَمَّلُوهُ حَتَّى ذَهَبَ عَنْهُ الرَّوْعُ فَقَالَ لِخَدِيجَةَ وَأَخْبَرَهَا الْخَبَرَ لَقَدْ خَشِيتُ عَلَى نَفْسِي فَقَالَتْ خَدِيجَةُ كَلَّا وَاللهِ مَا يُخْزِيكَ اللهُ أَبَدًا إِنَّكَ لَتَصِلُ الرَّحِمَ وَتَحْمِلُ الْكَلَّ وَتَكْسِبُ الْمَعْدُومَ وَتَقْرِي الضَّيْفَ وَتُعِينُ عَلَى نَوَائِبِ الْحَقِّ فَانْطَلَقَتْ بِهِ خَدِيجَةُ حَتَّى

أَتَتْ بِهِ وَرَقَةَ بْنَ نَوْفَلِ بْنِ أَسَدِ بْنِ عَبْدِ الْعُزَّى ابْنَ عَمِّ خَدِيجَةَ وَكَانَ امْرَأً قَدْ تَنَصَّرَ فِي الْجَاهِلِيَّةِ وَكَانَ يَكْتُبُ الْكِتَابَ الْعِبْرَانِيَّ فَيَكْتُبُ مِنْ الْإِنْجِيلِ بِالْعِبْرَانِيَّةِ مَا شَاءَ اللَّهُ أَنْ يَكْتُبَ وَكَانَ شَيْخًا كَبِيرًا قَدْ عَمِيَ فَقَالَتْ لَهُ خَدِيجَةُ يَا ابْنَ عَمِّ اسْمَعْ مِنْ ابْنِ أَخِيكَ فَقَالَ لَهُ وَرَقَةُ يَا ابْنَ أَخِي مَاذَا تَرَى فَأَخْبَرَهُ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ خَبَرَ مَا رَأَى فَقَالَ لَهُ وَرَقَةُ هَذَا النَّامُوسُ الَّذِي نَزَّلَ اللَّهُ عَلَى مُوسَى يَا لَيْتَنِي فِيهَا جَذَعًا لَيْتَنِي أَكُونُ حَيًّا إِذْ يُخْرِجُكَ قَوْمُكَ فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَوَمُخْرِجِيَّ هُمْ قَالَ نَعَمْ لَمْ يَأْتِ رَجُلٌ قَطُّ بِمِثْلِ مَا جِئْتَ بِهِ إِلَّا عُودِيَ وَإِنْ يُدْرِكْنِي يَوْمُكَ أَنْصُرْكَ نَصْرًا مُؤَزَّرًا ثُمَّ لَمْ يَنْشَبْ وَرَقَةُ أَنْ تُوُفِّيَ وَفَتَرَ الْوَحْيُ قَالَ ابْنُ شِهَابٍ وَأَخْبَرَنِي أَبُو سَلَمَةَ بْنُ عَبْدِ الرَّحْمَنِ أَنَّ جَابِرَ بْنَ عَبْدِ اللَّهِ الْأَنْصَارِيَّ قَالَ وَهُوَ يُحَدِّثُ عَنْ فَتْرَةِ الْوَحْيِ فَقَالَ فِي حَدِيثِهِ بَيْنَا أَنَا أَمْشِي إِذْ سَمِعْتُ صَوْتًا مِنْ السَّمَاءِ فَرَفَعْتُ بَصَرِي فَإِذَا الْمَلَكُ الَّذِي جَاءَنِي بِحِرَاءٍ جَالِسٌ عَلَى كُرْسِيٍّ بَيْنَ السَّمَاءِ وَالْأَرْضِ فَرُعِبْتُ مِنْهُ فَرَجَعْتُ فَقُلْتُ زَمِّلُونِي زَمِّلُونِي فَأَنْزَلَ اللَّهُ تَعَالَى﴿يَا أَيُّهَا الْمُدَّثِّرُ۝ قُمْ فَأَنْذِرْ۝ إِلَى قَوْلِهِ وَالرُّجْزَ فَاهْجُرْ۝﴾ فَحَمِيَ الْوَحْيُ وَتَتَابَعَ تَابَعَهُ عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ وَأَبُو صَالِحٍ وَتَابَعَهُ هِلَالُ بْنُ رَدَّادٍ عَنْ الزُّهْرِيِّ وَقَالَ يُونُسُ وَمَعْمَرٌ بَوَادِرُهُ

அறிவிப்பாளர் : உம்முல் முஃமினீன் ஆயிஷா ﵂

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுக்கு எதைக் கொண்டு வஹ்யி முதலாவதாக ஆரம்பிக்கப்பட்டதென்றால் அது தூக்கத்தில் வரும் நல்ல கனவாக இருந்தது. அவர்கள் எந்த ஒரு கனவையும் காணமாட்டார்கள், அது காலை விடிவதைப் போல் வந்தே தவிர. (-அவர்கள் காணும் கனவுகள் எல்லாம் அப்படியே நடந்துவிடும்.) பிறகு, தனிமையில் இருப்பது அவர்களுக்கு விருப்பமாக்கப்பட்டது. ஹிரா மலையின் குகையில் அவர்கள் தனிமையாக இருப்பார்கள். அதில் அவர்கள் (தங்கியிருக்கும்போது), தமது குடும்பத்தாரிடம் திரும்ப வருகிற வரை இப்ராஹீம் நபியுடைய மார்க்கப்படி வணக்க வழிபாடு செய்வார்கள். (தஹன்னுஸ் - என்றால் பல இரவுகள் தங்கி வழிபாடுகள் செய்வதாகும்.) அதற்காக அவர்கள் கட்டு சாதம் எடுத்துக் கொள்வார்கள். (-தங்கி இருக்கிற காலம் வரை தேவையான உணவை உடன் எடுத்துக் கொள்வார்கள்.) பிறகு (தமது மனைவி) கதீஜாவிடம் திரும்ப வருவார்கள். அதுபோன்ற அளவிற்கு கட்டு சாதம் எடுத்துக்கொள்வார்கள். (இன்னும் ஹிரா மலைக்கு சென்று வணக்க வழிபாடு செய்வார்கள்.) இறுதியாக அவர்கள் ஹிரா மலையின் குகையில் இருந்தபோது அல்ஹக் - உண்மை அவர்களுக்கு வந்தது. அதாவது, அவர்களிடம் வானவர் வந்தார். இன்னும் அவர் கூறினார் : நீர் ஓதுவீராக!. நபி ﷺ அவர்கள் கூறினார்கள் : நான் ஓதிப்படித்தவன் இல்லை! நபி ﷺ அவர்கள் கூறினார்கள், அவர் (-அந்த வானவர்) என்னைப் பிடித்தார், இன்னும், என்னை இறுகக் கட்டி அணைத்தார். (அவர் என்னை அணைத்தது) எனக்கு சிரமமாக இருந்தது.

பிறகு அவர் என்னை விட்டுவிட்டார். இன்னும் கூறினார் : நீர் ஓதுவீராக! நான் கூறினேன், நான் ஓதிப்படித்தவன் இல்லை. ஆக, அவர் என்னை பிடித்தார். இன்னும் இரண்டாவது முறையாக என்னை இறுகக் கட்டி அணைத்தார். அது எனக்கு மிக சிரமமாக இருந்தது. பிறகு அவர் என்னை விட்டுவிட்டார். இன்னும் கூறினார் : நீர் ஓதுவீராக! நான் கூறினேன், நான் ஓதிப்படித்தவன் இல்லை. ஆக, அவர் என்னைப் பிடித்தார். இன்னும் மூன்றாவது முறையாக என்னை இறுக கட்டி அணைத்தார். பிறகு என்னை விட்டுவிட்டார். இன்னும் கூறினார் :

﴿اقْرَأْ بِاسْمِ رَبِّكَ الَّذِي خَلَقَ ○
خَلَقَ الْإِنْسَانَ مِنْ عَلَقٍ ○ اقْرَأْ وَرَبُّكَ الْأَكْرَمُ ○﴾

பொருள் : படைத்த உமது ரப்பு (-இறைவனு)டைய பெயரால் நீர் ஓதுவீராக! அவன் மனிதனை ஒட்டிக்கொள்ளும் இரத்தக் கட்டியிலிருந்து படைத்தான். நீர் ஓதுவீராக! இன்னும் உமது ரப்பு மிகவும் கண்ணியமானவன் ஆவான். (அல்குர்ஆன் : 96 : 1-5)

தமது நெஞ்சு படபடக்க ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் இந்த வசனங்களுடன் (தமது வீட்டுக்கு) திரும்பினார்கள். இன்னும் கதீஜா பின்த் குவைலித் இடம் உள்ளே வந்தார்கள். இன்னும் கூறினார்கள் : என்னைப் போர்த்துங்கள்!. என்னைப் போர்த்துங்கள்!. என்னைப் போர்த்துங்கள்!. ஆக, அவர்களை (வீட்டிலுள்ளவர்கள்) போர்த்தினார்கள். இறுதியாக பயம் (நபி ﷺ) அவர்களை விட்டு சென்றது. அவர்கள் கதீஜாவிடம்

(நடந்தவற்றை) கூறினார்கள். இன்னும் (தான் கண்ட) எல்லா செய்திகளையும் அவருக்கு (-கதீஜாவுக்கு) அறிவித்தார்கள். திட்டவட்டமாக நான் என் உயிர் மீது பயப்படுகிறேன். அதற்கு கதீஜா கூறினார் : ஒருபோதும் அப்படி ஆகாது. அல்லாஹ்வின் மீது ஆணையாக! அல்லாஹ் ஒருபோதும் உம்மை இழிவுப்படுத்த மாட்டான். நிச்சயமாக நீர் இரத்த உறவுகளை சேர்க்கிறீர். தனது காரியத்தை சுயமாக நிர்வகிக்க முடியாதவருக்கு நீர் பொறுப்பு ஏற்கிறீர். இல்லாதவருக்கு சம்பாதித்து கொடுக்கிறீர். விருந்தாளிக்கு விருந்துபசரணை செய்கிறீர். உண்மையான சோதனைகளில் (மக்களுக்கு) உதவுகிறீர். ஆக, (இதற்கு பின்னர்) (நபி ﷺ) அவர்களை அழைத்துக் கொண்டு கதீஜா புறப்பட்டார். இறுதியாக (நபி ﷺ) அவர்களை வரகா இப்னு நவ்ஃபல் இப்னு அசத் இப்னு அப்துல் உஸ்ஸா விடம் கொண்டுவந்தார், (இவர்) கதீஜாவின் தந்தையின் சகோதரருடைய மகன் ஆவார். இவர் அறியாமைக் காலத்தில் நஸ்ரானியாக - கிறிஸ்த்துவராக மாறி இருந்த ஒரு மனிதர் ஆவார். இன்னும் அவர் இப்ராணி எழுத்துக்களை எழுதுபவராக இருந்தார். ஆகவே, இப்ராணி மொழியில் இருந்த இன்ஜீலை அல்லாஹ் அவருக்கு அவர் எழுத நாடியளவு எழுதுவார். அவர் கண் பார்வையை இழந்துவிட்ட, பெரிய வயோதிகராக இருந்தார். அவரை நோக்கி கதீஜா கூறினார் : எனது சாச்சாவின் மகனாரே! உமது சகோதரரின் மகனிடமிருந்து (அவர் கூறுவதை) நீர் செவியுருவீராக! அதற்கு வரகா (நபி ﷺ) அவர்களை நோக்கி என் சகோதரரின் மகனே! நீர் என்ன பார்க்கிறீர் என்று கேட்டார். அவருக்கு தான் பார்த்தவற்றின்

செய்தியை ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள் : அதற்கு (நபி ﷺ) அவர்களிடம் வரகா கூறினார் : இவர் (நபி) மூஸா (عليه السلام) அவர்கள் மீது அல்லாஹ் இறக்கிய நாமூஸ் - (இரகசியம் அறிந்த வானவர் ஜிப்ரீல்) ஆவார். நான் அதில் (உமது அழைப்புப் பணியின் காலத்தில்) சிறுவயது வாலிபனாக இருந்திருக்க வேண்டுமே! உம்மை உமது மக்கள் (இந்த ஊரை விட்டும்) வெளியேற்றும்போது நான் உயிரோடு இருக்க வேண்டுமே! அதற்கு ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள் : அவர்கள் என்னை வெளியேற்றுவார்களா? வரகா கூறினார் : ஆம், நீ கொண்டுவந்ததைப் போன்ற (மார்க்கத்)தை எந்த ஒரு மனிதரும் கொண்டுவந்ததில்லை அவர் பகைக்கப்பட்டே தவிர. (-இஸ்லாமிய மார்க்கத்தை கொண்டுவந்த எல்லா நபிமார்களையும் மக்கள் பகைத்துள்ளனர்.) உனது (அழைப்புப் பணியின்) காலம் என்னை அடைந்தால் உமக்கு நான் மிக பலமான உதவி செய்வேன். பிறகு வரகா நீண்ட காலம் வாழவில்லை, அவர் இறந்துவிட்டார். வஹ்யி இடைவெளியானது. (மீண்டும் வஹ்யி இறங்குவதில் சில கால இடைவெளி ஏற்பட்டது.)

இப்னு ஷிஹாப் கூறினார் : இன்னும் எனக்கு அபூ சலமா இப்னு அப்திர் ரஹ்மான் செய்தி அறிவித்தார், அதாவது, நிச்சயமாக ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் அல்அன்சாரி கூறினார், வஹ்யி உடைய இடைவெளி காலத்தைப் பற்றி (நபி ﷺ) அவர்கள் ஹதீஸ் அறிவிக்கும்போது கூறினார்கள். அதாவது, (நபி ﷺ) அவர்கள் தமது ஹதீஸில் கூறினார்கள் : நான் நடந்து சென்றுகொண்டிருந்தபோது வானத்திலிருந்து ஒரு

சப்தத்தை செவியுற்றேன். ஆகவே, எனது பார்வையை நான் உயர்த்தினேன். அப்போது என்னிடம் ஹிராவில் வந்த அதே வானவர் வானத்திற்கும் பூமிக்கும் மத்தியில் ஒரு நாற்காலியின் மீது அமர்ந்திருந்தார். நான் அவரின் காரணமாக (-அவரைக் கண்டதால்) திடுக்கத்தில் (-பயத்தில்) ஆனேன். ஆக, நான் (எனது வீட்டிற்கு) திரும்ப வந்தேன். இன்னும் என்னைப் போர்த்துங்கள்! என்னைப் போர்த்துங்கள்! என்று கூறினேன். ஆக, அல்லாஹு தஆலா **يَا أَيُّهَا الْمُدَّثِّرُ قُمْ فَأَنْذِرْ** யா அய்யுஹல் முத்தசிர் கும் ஃப அன்திர் என்பதிலிருந்து தனது சொல் **وَالرُّجْزَ فَاهْجُرْ** வர்ருஜ்ச ஃபஹ்ஜுர் வரை (உள்ள வசனங்களை) இறக்கினான்.

ஆக, வஹ்யி சூடு பிடித்தது (-வஹ்யி அதிகம் இறங்க ஆரம்பித்தது). இன்னும் (வஹ்யி இறங்குதல்) தொடர்ந்தது.

யூனுஸ் இன்னும் மஃமர் (தமது அறிவிப்பில் **يَرْجُف فُؤَاده** - தமது நெஞ்சு படபடக்க என்ற சொல்லுக்கு பதிலாக) **تَرْجُف بَوَادِره** தமது (புஜத்திற்கும் கழுத்துக்கும் இடையில் உள்ள) சதைகள் படபடக்க (ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் இந்த வசனங்களுடன் (தமது வீட்டுக்கு) திரும்பினார்கள்) என்று கூறினார்கள்.

## விளக்கம்

இந்த ஹதீஸில் நபி ﷺ அவர்களுக்கு வஹ்யின் ஆரம்பம் எப்படி இருந்தது என்பது தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. வஹ்யின் இடைப்பட்ட காலம் மூன்று ஆண்டுகளா, இரண்டரை ஆண்டுகளா, அல்லது ஆறுமாதமா, அல்லது

சில நாள்களா என்று கருத்து வேறுபாடுகள் இருப்பினும் சில நாள்கள் என்பதுவே சரியான கருத்து என இப்னு ஹஜர் உறுதி செய்கிறார்.

நபித்துவம் கிடைப்பதற்கு முன்பே நபி ﷺ அவர்கள் சிலைவணக்க வழிபாடுகளை விட்டு விலகி இருந்தார்கள் என்பது அறிந்த செய்தியாகும். நபிமார்கள் ஷிர்க்கை விட்டும் நபித்துவம் பெறுவதற்கு முன்பும் பாதுகாக்கப்பட்டவர்கள் என்பது அறிஞர்களின் ஒருமித்த கருத்தாகும். நபி இப்ராஹீம் عليه السلام உடைய மார்க்கத்திலிருந்து அக்கால அரபிகளிடம் இருந்த ஷிர்க் கலக்காத சில வணக்கங்களை நபி ﷺ அவர்கள் அறிந்திருந்தார்கள். அந்த வணக்கங்களைக் கொண்டு அல்லாஹ்வை வணங்க அவர்கள் தனிமையைத் தேடி ஹிரா மலை நோக்கி சென்றார்கள்.

ஹிரா மலை என்பது மக்காவின் கிழக்குப் பகுதியில், அரஃபாத் நோக்கி செல்லும்போது இடது பக்கத்தில் உள்ள ஒரு பிரபலமான மலையாகும். இது கஅபாவிலிருந்து நான்கு கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. மலையின் 634 மீட்டர் உயரத்தில் வடக்கு நோக்கி ஒரு சிறு குகை உள்ளது. அதன் நீளம் நான்கு முழங்களும், அதன் அகலம் இரண்டு முழங்களுக்கு குறைவாகவும் இருக்கும். அந்த மலையின் மேலிருந்து கஅபாவை பார்க்கலாம். நபி ﷺ அவர்கள் தமக்கு வஹ்யி இறங்குவதற்கு மூன்று ஆண்டுகளுக்கு முன்பிருந்து இங்கு வரும் வழக்கத்தை கொண்டிருந்தார்கள் என்றும் குறிப்பாக ரமழான் மாதத்தில் இங்கு அதிகம் தங்கி இருப்பார்கள் என்றும்

வரலாற்றில் கூறப்படுகிறது.

இதில் வரக்கூடிய வரகா என்பவர் இணைவைப்பை விட்டு விலகி மாற்றப்படாத கிறிஸ்த்துவ மதத்தை ஷாம் தேச பாதிரிகள் மூலம் தெரிந்து அறிந்து அதற்கு மாறி இருந்தார். இவர் அரபி, இப்ராணி ஆகிய இரு மொழிகளையும் எழுத, படிக்க கற்றிருந்தார்.

## படிப்பினைகள்

1. வரகா முஃமினாக இருந்தார்.

2. அல்லாஹ்விடம் நேர்வழியை தேடுவோருக்கு அல்லாஹ் அவருக்கு அதை இலகுவாக்கி தருகிறான்.

3. நபி ﷺ அவர்கள் இன்னும் எல்லா நபிமார்களின் கனவு அல்லாஹ்வின் புறத்திலிருந்து அவர்களுக்கு கொடுக்கப்பட்ட வஹ்யி ஆகும்.

4. அல்லாஹ்வை வணங்குவதற்காக மார்க்க வரைமுறைக்கு உட்பட்டு தனிமையில் இருப்பது விரும்பத்தக்கதாகும். உதாரணமாக பள்ளிவாசலில், வீட்டில் தனியாக இருந்து அல்லாஹ்வை தொழுவது, திக்ரு செய்வது, குர்ஆன் ஓதுவது, இன்னும் இவைப் போன்று.

5. இந்த ஹதீஸை ஆதாரமாக வைத்து வணக்க வழிபாட்டுக்காக தனிமையை தேடி காடு, மலைக்கு செல்லக் கூடாது. வஹ்யி வந்த பின்னர் நபி ﷺ அவர்கள் மீண்டும் அந்த மலைக்கு செல்ல வில்லை.

6. ஞானத்தை தேடி நானும் தனிமைக்கு செல்வேன் என்று கூறக் கூடாது. இப்போது ஞானம் குர்ஆனிலும் சுன்னாவிலும் நமக்கு கொடுக்கப்பட்டு விட்டது. ஆகவே, நாம் ஆசிரியரை தேடி செல்ல வேண்டுமே தவிர, காடுகளுக்கும் மலைகளுக்கும் அல்ல.

7. தேவையானளவு ஆசிரியர் தனது மாணவனை சிரமப்படுத்துவது தவறில்லை.

8. அல்குர்ஆனில் முதன் முதலாக இறங்கிய வசனம் இக்ரஃ பிஸ்மி ரப்பிகல்லதீ ஆகும்.

9. வீரமான, தைரியமான மனிதருக்கும் சில நேரங்களில் பயம், அச்சம், திடுக்கம் ஏற்படலாம். நமது நபிக்கு இங்கு ஏற்பட்டது போன்று. இன்னும் மூஸா ﵇ அவர்களுக்கு பாம்பை கண்டதும் ஏற்பட்டது போன்று.

10. பயந்தவரிடம் அவருடைய பயம் நீங்கி, அவர் அமைதியாகும் வரை கேள்விகள் கேட்காமல் இருப்பது நல்லது.

11. நற்குணங்கள், ஆபத்துகளை விட்டு பாதுகாப்பு பெற காரணமாக அமைகின்றன.

12 ஒருவரை அவரின் முகத்திற்கு முன்னால் புகழலாம், அவர் அதன் மூலம் கர்வமும் பெருமையும் பட மாட்டார் என்றிருந்தால்.

13. ஒருவருக்கு திடுக்கம், பயம் ஏற்பட்டால் அவரை சாந்தப்படுத்த வேண்டும், ஆறுதல் கூற வேண்டும், அவரின் பயத்தை போக்க முயற்சிக்க வேண்டும்.

14. கதீஜா ﷺ அவர்களின் சிறப்பு, அவர்களின் புத்திக்கூர்மை, கடினமான நேரத்தில் அழகிய முறையில் நடந்துகொண்டதை இந்த ஹதீஸின் வாயிலாக அறிய வருகிறோம்.

15. ஓர் ஆடவருக்கு அவரின் மனைவி சிறந்த ஆறுதலாகவும் உறுதுணையாகவும் உதவியாகவும் இருக்க வேண்டும்.

16. ஒருவர் எப்போதும் வேத அறிவை தேடுவதிலும் அதை எழுதுவதிலும் இருப்பது அல்லாஹ்விற்கு பிடித்தமான செயலாகும்.

17. தன்னால் புரிய முடியாத விஷயங்களை கல்வியாளரிடம் கேட்க வேண்டும்.

18. நம்மால் ஒரு நல்ல காரியத்தை செய்ய முடியாது என்று தெரிந்தாலும் அதை தான் செய்ய வேண்டும் என்று ஆசைப்படுவது ஒரு சிறப்பான பண்பாகும். வரகா ஆசைப்பட்டது போன்று.

19. நபிமார்களுக்கு உதவுவது அல்லாஹ்விற்கு உதவுவது ஆகும்.

20 இன்று நபிமார்கள் உயிரோடு இல்லை என்றாலும் அவர்களின் மார்க்கம் இருக்கிறது. அந்த மார்க்கத்திற்கு உதவுவது அல்லாஹ்விற்கு மிகப் பிடித்தமான செயலாகும்.

21. மார்க்கத்திற்கு உதவுவது என்றால் மார்க்கத்தை கற்பது, கற்பிப்பது, அதன் பக்கம் மக்களை அழைப்பது, அதன் பக்கம் மக்களை அழைப்பவர்களுக்கு உதவுவது ஆகும்.

22. தேவைப்படும்போது ஆசிரியரிடம் கேள்வி கேட்பது மாணவனுக்கு அவசியமாகும். நபி ﷺ அவர்கள் வரகாவிடம் கேட்டது போன்று.

23. ஆலோசனை யாரிடம் கேட்கப்படுகிறதோ அவர் தனது கருத்தை தெளிவாகவும் திருப்தியளிக்கும் ஆதாரத்துடனும் கூறி விட வேண்டும்.

24. வானவர்களுக்கு அல்லாஹ் மிகப் பெரிய வலிமைகளை, சக்திகளை வழங்கி இருக்கிறான். அவர்கள் அதன் மூலம் வானத்திற்கு உயர, பூமிக்கு இறங்கிவர ஆற்றல் பெறுகிறார்கள். நாடிய இடத்திற்கு நாடிய நேரத்தில் கண் சிமிட்டுவதற்குள் அவர்களால் சென்றுவிட முடியும்.

25. ஒருவருக்கு முடியாமல் இருக்கும்போது தனது குடும்பத்தாரிடம் உதவி கேட்பது தவறில்லை. நபி ﷺ அவர்கள் தன்னைப் போர்த்துங்கள் என்று தமது குடும்பத்தாரிடம் கூறியது போன்று.

26. நபிமார்கள் பல சோதனைகளுக்கும் சிரமங்களுக்கும் ஆளாகி இருக்கிறார்கள்.

27. நபிமார்களின் வாழ்க்கையை தெரிந்துகொள்வதில் நமக்கு ஆறுதலும் மன அமைதியும் படிப்பினையும் இருக்கின்றன.

28. நபி ﷺ அவர்கள் இந்த குர்ஆனை அல்லாஹ்விடமிருந்து பெறுவதில் எந்தளவு சிரமப்பட்டிருக்கிறார்கள் என்பதையும் இந்த ஹதீஸிலிருந்து நாம் அறிய வருகிறோம்.

29. உயர்வான விஷயங்கள் இலகுவாக கிடைப்பதில்லை என்பதையும் இந்த ஹதீஸிலிருந்து நாம் அறியலாம்.

30. ஒரு காரியம் எந்தளவு உயர்ந்ததாக இருக்கிறதோ அதற்காக அந்தளவு தியாகமும் அர்ப்பணிப்பும் தேவைப்படுகிறது.

---------------------

## ஹதீஸ் எண் : 4

حَدَّثَنَا مُوسَى بْنُ إِسْمَاعِيلَ قَالَ حَدَّثَنَا أَبُو عَوَانَةَ قَالَ حَدَّثَنَا مُوسَى بْنُ أَبِي عَائِشَةَ قَالَ حَدَّثَنَا سَعِيدُ بْنُ جُبَيْرٍ عَنْ ابْنِ عَبَّاسٍ فِي قَوْلِهِ تَعَالَى ﴿لَا تُحَرِّكْ بِهِ لِسَانَكَ لِتَعْجَلَ بِهِ﴾ قَالَ كَانَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يُعَالِجُ مِنْ التَّنْزِيلِ شِدَّةً وَكَانَ مِمَّا يُحَرِّكُ شَفَتَيْهِ فَقَالَ ابْنُ عَبَّاسٍ فَأَنَا أُحَرِّكُهُمَا لَكُمْ كَمَا كَانَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يُحَرِّكُهُمَا وَقَالَ سَعِيدٌ أَنَا أُحَرِّكُهُمَا كَمَا رَأَيْتُ ابْنَ عَبَّاسٍ يُحَرِّكُهُمَا فَحَرَّكَ شَفَتَيْهِ فَأَنْزَلَ اللَّهُ تَعَالَى ﴿لَا تُحَرِّكْ بِهِ لِسَانَكَ لِتَعْجَلَ بِهِ ۝ إِنَّ عَلَيْنَا جَمْعَهُ وَقُرْآنَهُ﴾ قَالَ جَمْعُهُ لَكَ فِي صَدْرِكَ وَتَقْرَأَهُ ﴿فَإِذَا قَرَأْنَاهُ فَاتَّبِعْ قُرْآنَهُ﴾ قَالَ فَاسْتَمِعْ لَهُ وَأَنْصِتْ ﴿ثُمَّ إِنَّ عَلَيْنَا بَيَانَهُ﴾ ثُمَّ إِنَّ عَلَيْنَا أَنْ تَقْرَأَهُ فَكَانَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ بَعْدَ ذَلِكَ إِذَا أَتَاهُ جِبْرِيلُ اسْتَمَعَ فَإِذَا انْطَلَقَ جِبْرِيلُ قَرَأَهُ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ كَمَا قَرَأَهُ

அறிவிப்பாளர் : இப்னு அப்பாஸ்

﴿لَا تُحَرِّكْ بِهِ لِسَانَكَ لِتَعْجَلَ بِهِ﴾

பொருள் : அதனுடன் (-ஜிப்ரீல் ஓதுவதுடன்) உமது நாவை நீர் அசைக்காதீர், அதை (-குர்ஆனை) அவசரமாக ஓதுவதற்காக.

(அல்குர்ஆன் 75 : 16)

என்ற மிக உயர்ந்தோனாகிய அவனது சொல்லுக்கு விளக்கமாக இப்னு அப்பாஸ் கூறுகிறார் : ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் குர்ஆன் இறங்கும்போது (அதை மனனம் செய்வதற்காக) அதிகம் சிரமம் எடுத்துக் கொள்வார்கள். அதிகமாக தமது இரு உதடுகளையும் (நாவையும்) அசைப்பவர்களாக இருந்தார்கள். இப்னு அப்பாஸ் கூறினார் : ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் அவ்விரண்டையும் அசைப்பவர்களாக இருந்தது போன்று நான் உங்களுக்கு அவ்விரண்டையும் அசைத்துக் காட்டுகிறேன். ஸயீது கூறினார் : இப்னு அப்பாஸ் அவ்விரண்டையும் அசைத்ததை நான் பார்த்தது போன்று உங்களுக்கு அவ்விரண்டையும் நான் அசைத்துக் காட்டுகிறேன். ஆக, (சயீது) அவ்விரண்டையும் அசைத்துக் காண்பித்தார். ஆக, அல்லாஹு தஆலா (பின் வரும் வசனத்தை) இறக்கினான் :

﴿لَا تُحَرِّكْ بِهِ لِسَانَكَ لِتَعْجَلَ بِهِ ۝ إِنَّ عَلَيْنَا جَمْعَهُ وَقُرْآنَهُ ۝﴾

பொருள் : அதற்காக உமது நாவை நீர் அசைக்காதீர், அதை அவசரமாக ஓதுவதற்காக. நிச்சயமாக அதை (உமது உள்ளத்தில்) ஒன்று சேர்ப்பதும் அதை (நீர்) ஓதும்படி செய்வதும் நம்மீது கடமையாகும். (அல்குர்ஆன் 75 : 16, 17)

(இதற்கு விளக்கம் இப்னு அப்பாஸ்) கூறினார் : அதை அவன் உமது நெஞ்சில் ஒன்று சேர்ப்பான். இன்னும் அதை நீர் ஓதுவீர்.

﴿فَإِذَا قَرَأْنَاهُ فَاتَّبِعْ قُرْآنَهُ ۝﴾

பொருள் : நான் அதை ஓதினால் அது ஓதப்படுவதை நீர்

தொடர்வீராக! (அல்குர்ஆன் 75 : 18)

(இதற்கு விளக்கம் இப்னு அப்பாஸ்) கூறினார் : அதை நீர் செவிதாழ்த்தி கேட்பீராக! இன்னும் வாய்மூடி அமைதியாக இருப்பீராக!

﴿ثُمَّ إِنَّ عَلَيْنَا بَيَانَهُ۝﴾

பொருள் : பிறகு அதை விளக்குவது நிச்சயமாக நம்மீது கடமையாகும். (அல்குர்ஆன் 75 : 19)

(அதாவது,) பிறகு அதை நீர் ஓதும்படி செய்வது நிச்சயமாக நம்மீது கடமையாகும். ஆக, ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் இதற்கு பின்னர் அவர்களிடம் ஜிப்ரீல் வந்தால் செவிகொடுத்து கேட்பார்கள். ஜிப்ரீல் சென்றுவிட்டால் அவர் அதை ஓதியது போன்றே நபி ﷺ அதை ஓதுவார்கள்.

## விளக்கம்

இந்த ஹதீஸும் வஹ்யி இறங்குவது, நபி ﷺ அவர்கள் அதை தமது மனதில் பாதுகாக்க முயற்சி செய்தது, அதற்காக சிரமம் எடுத்ததுப் பற்றி பேசுவதால் ஆசிரியர் இந்த ஹதீஸை இந்த பாடத்தில் பதிவு செய்கிறார்.

வஹ்யி இறங்குவது மிகக் கடினமான ஒன்றாக இருந்தது. வஹ்யி இறங்கும்போது நபி ﷺ அவர்களுக்கு வியர்வை அதிகமாக வரும். அழுத்தம் அதிகமாக இருக்கும்.

ஜிப்ரீல் ஓதும்போது தமக்கு ஏதும் தவறி விடுமோ, நாம் மனனம் செய்வதற்குள் ஜிப்ரீல் சென்றுவிடுவாரோ என்று பயந்து

அவர் ஓதும்போதே நபி ﷺ அவர்களும் சேர்ந்து சேர்ந்து ஓதுவார்கள். ஆகவே, அப்படி பயப்பட வேண்டாம், ஜிப்ரீல் ஓதும்போது நீங்கள் அமைதியாக கேளுங்கள்! அவர் ஓதியதை உமது மனதில் நாம் பதியவைப்போம், இன்னும் அதன்படி நீரும் சரியாக ஓதும்படி நாம் செய்வோம் என்று நபி ﷺ அவர்களுக்கு அல்லாஹ் ஆறுதலாகவும் வழிகாட்டுதலாகவும் சூரா கியாமா உடைய வசனத்தை இறக்கிய பின்னர் நபி ﷺ அவர்கள் அமைதி அடைந்தார்கள்.

ஜிப்ரீல் ஓதும்போது அமைதியாக செவிகொடுத்து சப்தமின்றி கேட்பார்கள். பின்னர் ஜிப்ரீல் ஓதியவாறே மக்களுக்கு ஓதிகாண்பிப்பார்கள்.

நபி ﷺ அவர்கள் எப்படி உதடுகளை அசைத்தார்கள் என்பதை இப்னு அப்பாஸ் அசைத்துக் காட்ட, அதுபோலவே இப்னு அப்பாஸின் மாணவர் சயீது தமது மாணவருக்கு அசைத்துக் காண்பித்தார். இந்த கியாமா அத்தியாயம் மக்காவில் இறங்கியது, இப்னு அப்பாஸ், நபி ﷺ அவர்கள் ஹிஜ்ரத் செய்வதற்கு மூன்று ஆண்டுகள் முன்பு பிறந்தார்கள். பிறகு இப்னு அப்பாஸ் நபியவர்களின் தோழமையில் மதீனா வந்தவுடன் இந்த வசனத்திற்கு நபி ﷺ அவர்கள் இப்னு அப்பாஸுக்கு விளக்கம் கூறியபோது தான் எப்படி உதடுகளை அசைத்தேன் என்பதை காண்பித்து கொடுத்திருப்பார்கள். அதை இப்னு அப்பாஸ் பார்த்துவிட்டு அவரும் தமது மாணவருக்கு தமது உதடுகளை அசைத்துக் காண்பித்தார் என்று இப்னு ஹஜர் விளக்கம் கூறுகிறார். மேலும்

இந்த வசனம் குறித்த மேலதிக விளக்கம் இந்நூலின் குர்ஆன் விரிவுரை அத்தியாயத்தில் பார்ப்போம் என்றும் இப்னு ஹஜர் கூறுகிறார்.

## படிப்பினைகள்

1. ஸஹாபாக்கள் வஹ்யை பாதுகாப்பதில், வஹ்யி குறித்த விளக்கங்களை சேகரிப்பதில், நபி ﷺ அவர்களிடமிருந்து குர்ஆனையும் அதன் விளக்கத்தையும் கற்பதில் அதிகம் ஆர்வம் உள்ளவர்களாக இருந்தார்கள் என்பதை இப்னு அப்பாஸின் இந்த அறிவிப்பிலிருந்து அறிகிறோம்.

2. நபித்தோழர்களில் சிலர் வயது குறைவானவர்களாக இருந்தாலும் கல்வியில் அதிகம் ஆர்வமும் ஆழமும் உள்ளவர்களாக இருந்தார்கள்.

3. இப்னு அப்பாஸ் அவர்களின் கல்வி ஆர்வமும் தேடலும் ஞானமும் குர்ஆன், சுன்னாவுடன் அவர்களுக்கு இருந்த ஈடுபாடும் இந்த ஹதீஸில் தெளிவாகின்றன.

4. நபி ﷺ அவர்கள் குர்ஆனை நெஞ்சில் நிறுத்துவதிலும் அதை மரணம் வரை நினைவில் வைத்திருப்பதிலும் அதன் கருத்துகளை சரியாக புரிவதிலும் மக்களுக்கு குர்ஆனையும் அதன் கருத்துகளையும் சரியாக கற்றுக் கொடுப்பதிலும் நபி ﷺ அவர்களுக்கு அல்லாஹ்வின் பேருதவியும் அருளும் உடன் இருந்தன.

5. அல்லாஹு தஆலா கூறுகிறான் :

﴿إِنَّا نَحْنُ نَزَّلْنَا الذِّكْرَ وَإِنَّا لَهُ لَحَافِظُونَ۝﴾

பொருள் : நிச்சயமாக நாமே இந்த நினைவூட்டலை சிறிது சிறிதாக இறக்கினோம். இன்னும் நிச்சயமாக நாமே இதை பாதுகாப்பவர்கள் ஆவோம். (அல்குர்ஆன் 15 : 9)

என்ற வசனத்தின் உண்மையையும் கியாமா அத்தியாயத்தின் மேற்கூறப்பட்ட வசனங்களின் உண்மையையும் நாம் கண்கூடாக அறிந்து கொள்கிறோம்.

6. அல்லாஹ்வின் வேதத்தை மனனம் செய்வதிலும் அதை பாதுகாப்பதிலும் அதை ஸஹாபாக்களுக்கு கற்பித்து கொடுப்பதிலும் நபி ﷺ அவர்கள் மிகுந்த அக்கறை செலுத்தினார்கள்.

7. குர்ஆனுடனும் ஹதீஸூடனும் ஒருவருக்கு தொடர்பு ஏற்பட்டுவிட்டால் அது அவரின் ஈருலக கண்ணியத்திற்கு போதுமானதாகும்.

8. குர்ஆனை மனனம் செய்தவர்கள் அதை மறக்காமல் பாதுகாப்பது மிக முக்கியம். இதை அடுத்த ஹதீஸில் இன்னும் தெளிவாக நாம் அறியலாம்.

9. குர்ஆனை நேசிப்பது அதை தொழுகையிலும் அதற்கு வெளியிலும் அதிகம் ஓதுவது மிகச் சிறந்த அமலாகும்.

10. ஆசிரியர் சில முக்கியமான செய்திகளை, அல்லது தேவைப்படும் செய்திகளை தனது மாணவர்களுக்கு செய்துகாட்டி

கற்பிப்பது மிகவும் நல்ல தாக்கத்தை ஏற்படுத்தக்கூடியதாக அமையும். இந்த ஹதீஸில் இப்னு அப்பாஸ் செய்து காட்டியது போன்று. குறிப்பாக உளூ, தொழுகை இன்னும் இது போன்ற அமல்களை படித்து மட்டும் கொடுக்காமல் ஆசிரியர் சரியாக செய்துகாட்டினால் மாணவர்கள் இல்மை சரியாக புரிந்து கற்றுக் கொள்வார்கள்.

--------------------

## ஹதீஸ் எண் : 5

حَدَّثَنَا عَبْدَانُ قَالَ أَخْبَرَنَا عَبْدُ اللهِ قَالَ أَخْبَرَنَا يُونُسُ عَنْ الزُّهْرِيِّ ح وحَدَّثَنَا بِشْرُ بْنُ مُحَمَّدٍ قَالَ أَخْبَرَنَا عَبْدُ اللهِ قَالَ أَخْبَرَنَا يُونُسُ وَمَعْمَرٌ عَنْ الزُّهْرِيِّ نَحْوَهُ قَالَ أَخْبَرَنِي عُبَيْدُ اللهِ بْنُ عَبْدِ اللهِ عَنْ ابْنِ عَبَّاسٍ قَالَ كَانَ رَسُولُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ أَجْوَدَ النَّاسِ وَكَانَ أَجْوَدُ مَا يَكُونُ فِي رَمَضَانَ حِينَ يَلْقَاهُ جِبْرِيلُ وَكَانَ يَلْقَاهُ فِي كُلِّ لَيْلَةٍ مِنْ رَمَضَانَ فَيُدَارِسُهُ الْقُرْآنَ فَلَرَسُولُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ أَجْوَدُ بِالْخَيْرِ مِنْ الرِّيحِ الْمُرْسَلَةِ

அறிவிப்பாளர் : இப்னு அப்பாஸ்

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் மக்களில் அதிகம் கொடை கொடுப்பவராக இருந்தார்கள். (நபி ﷺ) அவர்கள் அதிகம் கொடை கொடுப்பவர்களாக இருப்பது ரமழானில், (நபி ﷺ) அவர்களை ஜிப்ரீல் சந்திக்கும்போதாகும். அவர், (நபி ﷺ) அவர்களை ரமழானின் ஒவ்வொரு இரவிலும் சந்திப்பவராக இருந்தார். இன்னும் (நபி ﷺ) அவர்களுடன் அவர் குர்ஆனை மனனமாக ஓதுவார். (நபியவர்களும் அவருக்கு மனனமாக குர்ஆனை ஓதிக் காட்டுவார்கள்.) ஆக, நிச்சயமாக ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் தொடர்ந்து வேகமாக வீசும் காற்றை விட செல்வத்தை அதிகம் கொடை கொடுப்பவர்களாக இருந்தார்கள்.

## விளக்கம்

இந்த ஹதீஸில் இப்னு அப்பாஸ், நபி ﷺ அவர்களின் கொடைத்தன்மையைப் பற்றியும் ரமழானில் ஜிப்ரீலும் நபியவர்களும் ஒருவருக்கொருவர் குர்ஆனை மனப்பாடமாக ஓதி காண்பித்து வந்தது பற்றியும் குறிப்பிடுகிறார்கள்.

நபி ﷺ அவர்கள் வஹ்யி இறங்கிய காலத்திலிருந்து அதை பாதுகாப்பதில் மிகுந்த அக்கறையும் கவனமும் உள்ளவர்களாக இருந்தார்கள் என்பதை இந்த ஹதீஸின் மூலம் ஆசிரியர் தெளிவுப்படுத்துகிறார். அத்துடன் வஹ்யின் ஆரம்பம் என்ற தலைப்பின் கீழ் இதை பதிவு செய்ததன் மூலமாக அவர்கள் உணர்த்த விரும்புவதாவது : நபி ﷺ அவர்களுக்கு வஹ்யின் ஆரம்பமும் ரமழானில் இருந்தது. ஆகவே, நபி ﷺ அவர்களுடன் ஜிப்ரீல் குர்ஆனை ஓதுவதும் ரமழானில் இருந்தது. இவ்வாறு அய்னி தனது விரிவுரையில் கூறுகிறார்.

நபி ﷺ அவர்கள் எப்போதும் தான தர்மம் செய்யும் பழக்கமுள்ளவர்களாக இருந்தார்கள். தன்னிடம் யார் எதைக் கேட்டாலும் உடனே அவருக்கு அதை கொடுத்துவிடுவார்கள் என்று முஸ்னது அஹ்மதில் பதிவான இதே அறிவிப்பில் இப்னு அப்பாஸ் கூறியதாக கூடுதலாக அறிவிக்கப்பட்டுள்ளது.

இந்த ஹதீஸில் **جود** ஜூத் என்பதிலிருந்து வந்த **أجود** அஜ்வது என்ற பதம் பயன்படுத்தப்பட்டுள்ளது. இது தர்மம் என்ற பொருளில் உள்ள சதகா என்ற பதத்தை விட விசாலமானதாகும்.

அதாவது, கட்டாயமான தர்மம் போக உபரியாக வாரி வழங்குவதையும், ஈகை குணத்துடன் இருப்பதையும் இது குறிக்கும்.

இப்னு ஹஜர் பதிவு செய்த சில விளக்கங்களை இங்கு பார்ப்போம்

கொடை என்பது மார்க்கத்தில்,

وَالْجُود فِي الشَّرْع إِعْطَاء مَا يَنْبَغِي لِمَنْ يَنْبَغِي

எதை யாருக்கு கொடுக்க வேண்டுமோ அதை அவருக்கு கொடுப்பதாகும்.

ரமழானில் குர்ஆனை ஓதுவதில் உள்ள ஞானமாவது, உள்ளத்தின் சீமான் தனத்தை நபி ﷺ அவர்களுக்கு புதுப்பித்து கொடுக்கும் என்பதாகும். கொடை என்பது தர்மம் என்ற சொல்லை விட பொதுவான சொல்லாகும். இன்னும் ரமழான் நன்மைகளுக்கான மாதமாகும். ரமழானில் மற்ற மாதங்களை விட அதிகமாக அல்லாஹ்வின் அருள் அடியார்கள் மீது இறங்குகின்றன. ஆகவே, நபி ﷺ அவர்களும் மற்ற மாதங்களை விட ரமழானில் அதிகம் கொடை கொடுப்பவர்களாக இருந்தார்கள். நேரம், அதில் இறக்கப்பட்ட வேதம், அதைக் கொண்டு வந்தவர், அவருடன் குர்ஆனை பரிமாறிக் கொள்வது ஆகிய அனைத்தையும் கவனித்து நபியவர்களின் கொடைத்தன்மையும் அதிகமாக ரமழானில் இருந்தது. உண்மையான ஞானம் அல்லாஹு தஆலாவிடம் இருக்கிறது.

## படிப்பினைகள்

1 எல்லா நேரத்திலும் கொடை கொடுப்பதை இந்த ஹதீஸ் தூண்டுகிறது.

2 ரமழானில் அதிகம் கொடை கொடுக்க வேண்டும் என்பதையும் இந்த ஹதீஸ் தூண்டுகிறது.

3 நல்லோரை சந்திக்கும்போது அதிகம் கொடுக்க வேண்டும் என்பதையும் இந்த ஹதீஸ் தூண்டுகிறது.

4 நல்லோரையும் நன்மை செய்வோரையும் சந்திப்பது சிறந்த அமல்.

5 சந்திக்கப்படுபவர் வெறுக்கவில்லை என்றால் அதிகம் சந்திக்க செல்வது தவறில்லை.

6 ரமழானில் குர்ஆன் ஓதுவதை அதிகப்படுத்துவது விரும்பத்தக்கதாகும்.

7 மற்ற திக்ருகளில் ஈடுபடுவதை விட ரமழானில் அதிகம் குர்ஆன் ஓதுவது சிறப்பாகும். ஏனெனில், திக்ருகளில் ஈடுபடுவது குர்ஆன் ஓதுவதை விட சிறப்பாக இருந்திருப்பின் அல்லது அதற்கு சமமாக இருந்திருப்பின் நபியும் ஜிப்ரீலும் அதை செய்திருப்பார்கள். இந்த ஏழு படிப்பினைகளை நவவி கூறுவதாக இப்னு ஹஜர் பதிவு செய்கிறார்.

8 இப்னு ஹஜர் கூறுகிறார் : குர்ஆன் இறங்குதலின் தொடக்கம் ரமழானில் இருந்தது என்பதை இந்த ஹதீஸ் சுட்டிக் காட்டுகிறது. இப்னு அப்பாஸ் உடைய ஹதீஸில் இருந்து கிடைத்த உறுதியான செய்தியாவது : ரமழானில்தான் முதல் வானத்திற்கு

ஒரே தடவையில் மொத்தமாக இறங்கியது. ஆகவே, ஜிப்ரீல் ரமழானில் நபி ﷺ அவர்களை தொடர்ந்து சந்திப்பார்கள். இன்னும் ஒரு ரமழானிலிருந்து (அடுத்த) ரமழான் வரை இறங்கியதை நபியவர்களுடன் மனனமாக ஒருவருக்கொருவர் ஓதி காண்பித்துக் கொள்வார்கள். நபி ﷺ அவர்கள் இறந்த ஆண்டில் இருமுறை ஓதிக் காண்பித்தார்கள் என்று ஃபாத்திமா رضي الله عنها அறிவிக்கும் ஹதீஸை ஆசிரியர் பதிவு செய்துள்ளார். ஆகவே, இந்த ஹதீஸை இந்த பாடத்தில் ஆசிரியர் கொண்டு வந்ததுடைய தொடர்பைப் பற்றி கேள்வி எழுப்பியவருக்குரிய பதிலும் நமக்கு இதில் இருக்கிறது. சரியானதை அல்லாஹ் மிக அறிந்தவன். இப்னு ஹஜரின் கூற்று முடிவுற்றது.

9. நபி ﷺ அவர்களை பின்பற்றி குறிப்பாக சமுதாயத் தலைவர்களும் மார்க்க அறிஞர்களும் அதிகம் கொடை கொடுக்கும் பழக்கத்தை கடைப்பிடிக்க வேண்டும்.

10. கொடை கொடுப்பது, அதிகம் தர்மம் செய்வது அல்லாஹ்விற்கும் நபியவர்களுக்கும் மிக விருப்பமான குணமாகும்.

11. குர்ஆனை மனனம் செய்தவர் அதை தொடர்ந்து ஓதி வருவதுடன் குர்ஆன் ஓதுவதில் திறமையான ஒருவரிடம் தான் மனனம் செய்ததை ஆண்டுக்கு ஒரு முறை ஓதிக்காட்டி தனது மனனத்தை தக்க வைப்பதும் சரி செய்வதும் அவசியமாகும்.

12. நபிமார்கள் மற்ற எல்லோரையும் விட எப்போதும் அமல்களில் முந்தியவர்களாக இருப்பார்கள். அமல்களில்

அவர்களை யாரும் முந்திவிட முடியாது.

13 அதிகம் கொடுப்பதுதான் கொடை என்பதல்ல, மாறாக, தன்னிடம் இருப்பதை அதற்கு தகுதியானவர் வரும்போது அது குறைவாக இருந்தாலும் அதை மனமுவந்து கொடுப்பதுதான் கொடையாகும்.

14 ஒருவர் குர்ஆனில் எந்தளவு தேர்ச்சி பெற்றவராக இருப்பாரோ அந்தளவு அவர் குர்ஆனுடன் தொடர்புடையவராக இருக்க வேண்டும். ஏனெனில், அப்போதுதான் அவர் தான் கற்றதை நினைவில் வைத்திருக்க முடியும். இன்னும் அதிகம் அறிவுகளை பெற்றுக் கொண்டே இருக்க முடியும்.

15 நாமாக தேடிச் சென்று நல்லோரை, அறிஞர்களை சந்திக்க வேண்டும். அவர்களின் கல்வியிலிருந்து நற்பலன் அடைய வேண்டும்.

16 நல்லோரையும் கல்வி கற்ற அறிஞர்களையும் சந்தித்து, அவர்களின் அறிவைக் கொண்டு பலன் பெறுவது நமக்கு மார்க்கப் பற்றை அதிகரிக்கச் செய்யும். இன்னும் அல்லாஹ்வின் நெருக்கத்தையும் அதிகப்படுத்தும்.

17 மாணவர்கள், ஆசிரியரை தேடிச் செல்ல வேண்டும். அது முடியாததாக இருந்தால் ஆசிரியர் சென்று மாணவர்களுக்கு கல்வி கற்பிப்பதும் தன்னிடம் உள்ள அறிவை போதிப்பதும் அவசியம் என்பதை நபி ﷺ அவர்களை ஜிப்ரீல் சந்திக்க வந்ததிலிருந்து அறிய முடிகிறது. அல்லாஹ் மிக அறிந்தவன்.

18 நன்மையிலும் நல்லறங்களிலும் ஆர்வமுள்ளவர்கள் அவற்றுக்குரிய சந்தர்ப்பங்களை தவற விட மாட்டார்கள். மாறாக, அத்தகைய நல்ல சந்தர்ப்பங்களை எதிர்ப்பார்த்து இருப்பார்கள்.

19 பொதுவாக எல்லா நல்லமல்களுக்கும் குறிப்பாக தர்மத்துக்கும் குர்ஆன் ஓதுவதற்கும் உரிய மிகப் பெரிய வாய்ப்பாக ரமழானை பயன்படுத்தி வந்தார்கள். அதில் மற்ற மாதங்களை விட அதிகம் சிரமம் எடுத்து அமல்களில் தீவிரம் காட்டுவார்கள்.

20. நல்லவர்களை சந்திக்கும்போது, இன்னும் அவர்களின் நட்பில் இருக்கும்போது நமக்குள்ளும் அமல்களில் ஆர்வம் அதிகம் உண்டாகும். இன்னும் மறுமை நம்பிக்கையும் அதகரிக்கும்.

--------------------

## ஹதீஸ் எண் : 6

حَدَّثَنَا أَبُو الْيَمَانِ الْحَكَمُ بْنُ نَافِعٍ قَالَ أَخْبَرَنَا شُعَيْبٌ عَنْ الزُّهْرِيِّ قَالَ أَخْبَرَنِي عُبَيْدُ اللَّهِ بْنُ عَبْدِ اللَّهِ بْنِ عُتْبَةَ بْنِ مَسْعُودٍ أَنَّ عَبْدَ اللَّهِ بْنَ عَبَّاسٍ أَخْبَرَهُ أَنَّ أَبَا سُفْيَانَ بْنَ حَرْبٍ أَخْبَرَهُ أَنَّ هِرَقْلَ أَرْسَلَ إِلَيْهِ فِي رَكْبٍ مِنْ قُرَيْشٍ وَكَانُوا تِجَارًا بِالشَّأْمِ فِي الْمُدَّةِ الَّتِي كَانَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مَادَّ فِيهَا أَبَا سُفْيَانَ وَكُفَّارَ قُرَيْشٍ فَأَتَوْهُ وَهُمْ بِإِيلِيَاءَ فَدَعَاهُمْ فِي مَجْلِسِهِ وَحَوْلَهُ عُظَمَاءُ الرُّومِ ثُمَّ دَعَاهُمْ وَدَعَا بِتَرْجُمَانِهِ فَقَالَ أَيُّكُمْ أَقْرَبُ نَسَبًا بِهَذَا الرَّجُلِ الَّذِي يَزْعُمُ أَنَّهُ نَبِيٌّ فَقَالَ أَبُو سُفْيَانَ فَقُلْتُ أَنَا أَقْرَبُهُمْ نَسَبًا فَقَالَ أَدْنُوهُ مِنِّي وَقَرِّبُوا أَصْحَابَهُ فَاجْعَلُوهُمْ عِنْدَ ظَهْرِهِ ثُمَّ قَالَ لِتَرْجُمَانِهِ قُلْ لَهُمْ إِنِّي سَائِلٌ هَذَا عَنْ هَذَا الرَّجُلِ فَإِنْ كَذَبَنِي فَكَذِّبُوهُ فَوَاللَّهِ لَوْلَا الْحَيَاءُ مِنْ أَنْ يَأْثِرُوا عَلَيَّ كَذِبًا لَكَذَبْتُ عَنْهُ ثُمَّ كَانَ أَوَّلَ مَا سَأَلَنِي عَنْهُ أَنْ قَالَ كَيْفَ نَسَبُهُ فِيكُمْ قُلْتُ هُوَ فِينَا ذُو نَسَبٍ قَالَ فَهَلْ قَالَ هَذَا الْقَوْلَ مِنْكُمْ أَحَدٌ قَطُّ قَبْلَهُ قُلْتُ لَا قَالَ فَهَلْ كَانَ مِنْ آبَائِهِ مِنْ مَلِكٍ قُلْتُ لَا قَالَ فَأَشْرَافُ النَّاسِ يَتَّبِعُونَهُ أَمْ ضُعَفَاؤُهُمْ فَقُلْتُ بَلْ ضُعَفَاؤُهُمْ قَالَ أَيَزِيدُونَ أَمْ يَنْقُصُونَ قُلْتُ بَلْ يَزِيدُونَ قَالَ فَهَلْ يَرْتَدُّ أَحَدٌ مِنْهُمْ سَخْطَةً لِدِينِهِ بَعْدَ أَنْ يَدْخُلَ فِيهِ قُلْتُ لَا قَالَ فَهَلْ كُنْتُمْ تَتَّهِمُونَهُ بِالْكَذِبِ قَبْلَ أَنْ يَقُولَ مَا قَالَ قُلْتُ لَا قَالَ فَهَلْ يَغْدِرُ قُلْتُ لَا

وَنَحْنُ مِنْهُ فِي مُدَّةٍ لَا نَدْرِي مَا هُوَ فَاعِلٌ فِيهَا قَالَ وَلَمْ تُمْكِنِّي كَلِمَةٌ أُدْخِلُ فِيهَا شَيْئًا غَيْرُ هَذِهِ الْكَلِمَةِ قَالَ فَهَلْ قَاتَلْتُمُوهُ قُلْتُ نَعَمْ قَالَ فَكَيْفَ كَانَ قِتَالُكُمْ إِيَّاهُ قُلْتُ الْحَرْبُ بَيْنَنَا وَبَيْنَهُ سِجَالٌ يَنَالُ مِنَّا وَنَنَالُ مِنْهُ قَالَ مَاذَا يَأْمُرُكُمْ قُلْتُ يَقُولُ اعْبُدُوا اللَّهَ وَحْدَهُ وَلَا تُشْرِكُوا بِهِ شَيْئًا وَاتْرُكُوا مَا يَقُولُ آبَاؤُكُمْ وَيَأْمُرُنَا بِالصَّلَاةِ وَالزَّكَاةِ وَالصِّدْقِ وَالْعَفَافِ وَالصِّلَةِ فَقَالَ لِلتَّرْجُمَانِ قُلْ لَهُ سَأَلْتُكَ عَنْ نَسَبِهِ فَذَكَرْتَ أَنَّهُ فِيكُمْ ذُو نَسَبٍ فَكَذَلِكَ الرُّسُلُ تُبْعَثُ فِي نَسَبِ قَوْمِهَا وَسَأَلْتُكَ هَلْ قَالَ أَحَدٌ مِنْكُمْ هَذَا الْقَوْلَ فَذَكَرْتَ أَنْ لَا فَقُلْتُ لَوْ كَانَ أَحَدٌ قَالَ هَذَا الْقَوْلَ قَبْلَهُ لَقُلْتُ رَجُلٌ يَأْتَسِي بِقَوْلٍ قِيلَ قَبْلَهُ وَسَأَلْتُكَ هَلْ كَانَ مِنْ آبَائِهِ مِنْ مَلِكٍ فَذَكَرْتَ أَنْ لَا قُلْتُ فَلَوْ كَانَ مِنْ آبَائِهِ مِنْ مَلِكٍ قُلْتُ رَجُلٌ يَطْلُبُ مُلْكَ أَبِيهِ وَسَأَلْتُكَ هَلْ كُنْتُمْ تَتَّهِمُونَهُ بِالْكَذِبِ قَبْلَ أَنْ يَقُولَ مَا قَالَ فَذَكَرْتَ أَنْ لَا فَقَدْ أَعْرِفُ أَنَّهُ لَمْ يَكُنْ لِيَذَرَ الْكَذِبَ عَلَى النَّاسِ وَيَكْذِبَ عَلَى اللَّهِ وَسَأَلْتُكَ أَشْرَافُ النَّاسِ اتَّبَعُوهُ أَمْ ضُعَفَاؤُهُمْ فَذَكَرْتَ أَنَّ ضُعَفَاءَهُمْ اتَّبَعُوهُ وَهُمْ أَتْبَاعُ الرُّسُلِ وَسَأَلْتُكَ أَيَزِيدُونَ أَمْ يَنْقُصُونَ فَذَكَرْتَ أَنَّهُمْ يَزِيدُونَ وَكَذَلِكَ أَمْرُ الْإِيمَانِ حَتَّى يَتِمَّ وَسَأَلْتُكَ أَيَرْتَدُّ أَحَدٌ سَخْطَةً لِدِينِهِ بَعْدَ أَنْ يَدْخُلَ فِيهِ فَذَكَرْتَ أَنْ لَا وَكَذَلِكَ الْإِيمَانُ حِينَ تُخَالِطُ بَشَاشَتُهُ الْقُلُوبَ وَسَأَلْتُكَ هَلْ يَغْدِرُ فَذَكَرْتَ أَنْ لَا وَكَذَلِكَ الرُّسُلُ لَا تَغْدِرُ

وَسَأَلْتُكَ بِمَا يَأْمُرُكُمْ فَذَكَرْتَ أَنَّهُ يَأْمُرُكُمْ أَنْ تَعْبُدُوا اللَّهَ وَلَا تُشْرِكُوا بِهِ شَيْئًا وَيَنْهَاكُمْ عَنْ عِبَادَةِ الْأَوْثَانِ وَيَأْمُرُكُمْ بِالصَّلَاةِ وَالصِّدْقِ وَالْعَفَافِ فَإِنْ كَانَ مَا تَقُولُ حَقًّا فَسَيَمْلِكُ مَوْضِعَ قَدَمَيَّ هَاتَيْنِ وَقَدْ كُنْتُ أَعْلَمُ أَنَّهُ خَارِجٌ لَمْ أَكُنْ أَظُنُّ أَنَّهُ مِنْكُمْ فَلَوْ أَنِّي أَعْلَمُ أَنِّي أَخْلُصُ إِلَيْهِ لَتَجَشَّمْتُ لِقَاءَهُ وَلَوْ كُنْتُ عِنْدَهُ لَغَسَلْتُ عَنْ قَدَمِهِ ثُمَّ دَعَا بِكِتَابِ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ الَّذِي بَعَثَ بِهِ دِحْيَةُ إِلَى عَظِيمِ بُصْرَى فَدَفَعَهُ إِلَى هِرَقْلَ فَقَرَأَهُ فَإِذَا فِيهِ بِسْمِ اللَّهِ الرَّحْمَنِ الرَّحِيمِ مِنْ مُحَمَّدٍ عَبْدِ اللَّهِ وَرَسُولِهِ إِلَى هِرَقْلَ عَظِيمِ الرُّومِ سَلَامٌ عَلَى مَنْ اتَّبَعَ الْهُدَى أَمَّا بَعْدُ فَإِنِّي أَدْعُوكَ بِدِعَايَةِ الْإِسْلَامِ أَسْلِمْ تَسْلَمْ يُؤْتِكَ اللَّهُ أَجْرَكَ مَرَّتَيْنِ فَإِنْ تَوَلَّيْتَ فَإِنَّ عَلَيْكَ إِثْمَ الْأَرِيسِيِّينَ وَ﴿يَا أَهْلَ الْكِتَابِ تَعَالَوْا إِلَى كَلِمَةٍ سَوَاءٍ بَيْنَنَا وَبَيْنَكُمْ أَنْ لَا نَعْبُدَ إِلَّا اللَّهَ وَلَا نُشْرِكَ بِهِ شَيْئًا وَلَا يَتَّخِذَ بَعْضُنَا بَعْضًا أَرْبَابًا مِنْ دُونِ اللَّهِ فَإِنْ تَوَلَّوْا فَقُولُوا اشْهَدُوا بِأَنَّا مُسْلِمُونَ﴾ قَالَ أَبُو سُفْيَانَ فَلَمَّا قَالَ مَا قَالَ وَفَرَغَ مِنْ قِرَاءَةِ الْكِتَابِ كَثُرَ عِنْدَهُ الصَّخَبُ وَارْتَفَعَتْ الْأَصْوَاتُ وَأُخْرِجْنَا فَقُلْتُ لِأَصْحَابِي حِينَ أُخْرِجْنَا لَقَدْ أَمِرَ أَمْرُ ابْنِ أَبِي كَبْشَةَ إِنَّهُ يَخَافُهُ مَلِكُ بَنِي الْأَصْفَرِ فَمَا زِلْتُ مُوقِنًا أَنَّهُ سَيَظْهَرُ حَتَّى أَدْخَلَ اللَّهُ عَلَيَّ الْإِسْلَامَ وَكَانَ ابْنُ النَّاظُورِ صَاحِبُ إِيلِيَاءَ وَهِرَقْلَ سُقُفًّا عَلَى نَصَارَى الشَّأْمِ يُحَدِّثُ أَنَّ هِرَقْلَ حِينَ قَدِمَ إِيلِيَاءَ أَصْبَحَ

يَوْمًا خَبِيثَ النَّفْسِ فَقَالَ بَعْضُ بَطَارِقَتِهِ قَدْ اسْتَنْكَرْنَا هَيْئَتَكَ قَالَ ابْنُ النَّاظُورِ وَكَانَ هِرَقْلُ حَزَّاءً يَنْظُرُ فِي النُّجُومِ فَقَالَ لَهُمْ حِينَ سَأَلُوهُ إِنِّي رَأَيْتُ اللَّيْلَةَ حِينَ نَظَرْتُ فِي النُّجُومِ مَلِكَ الْخِتَانِ قَدْ ظَهَرَ فَمَنْ يَخْتَتِنُ مِنْ هَذِهِ الْأُمَّةِ قَالُوا لَيْسَ يَخْتَتِنُ إِلَّا الْيَهُودُ فَلَا يُهِمَّنَّكَ شَأْنُهُمْ وَاكْتُبْ إِلَى مَدَايِنِ مُلْكِكَ فَيَقْتُلُوا مَنْ فِيهِمْ مِنْ الْيَهُودِ فَبَيْنَمَا هُمْ عَلَى أَمْرِهِمْ أُتِيَ هِرَقْلُ بِرَجُلٍ أَرْسَلَ بِهِ مَلِكُ غَسَّانَ يُخْبِرُ عَنْ خَبَرِ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَلَمَّا اسْتَخْبَرَهُ هِرَقْلُ قَالَ اذْهَبُوا فَانْظُرُوا أَمُخْتَتِنٌ هُوَ أَمْ لَا فَنَظَرُوا إِلَيْهِ فَحَدَّثُوهُ أَنَّهُ مُخْتَتِنٌ وَسَأَلَهُ عَنْ الْعَرَبِ فَقَالَ هُمْ يَخْتَتِنُونَ فَقَالَ هِرَقْلُ هَذَا مُلْكُ هَذِهِ الْأُمَّةِ قَدْ ظَهَرَ ثُمَّ كَتَبَ هِرَقْلُ إِلَى صَاحِبٍ لَهُ بِرُومِيَةَ وَكَانَ نَظِيرَهُ فِي الْعِلْمِ وَسَارَ هِرَقْلُ إِلَى حِمْصَ فَلَمْ يَرِمْ حِمْصَ حَتَّى أَتَاهُ كِتَابٌ مِنْ صَاحِبِهِ يُوَافِقُ رَأْيَ هِرَقْلَ عَلَى خُرُوجِ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَأَنَّهُ نَبِيٌّ فَأَذِنَ هِرَقْلُ لِعُظَمَاءِ الرُّومِ فِي دَسْكَرَةٍ لَهُ بِحِمْصَ ثُمَّ أَمَرَ بِأَبْوَابِهَا فَغُلِّقَتْ ثُمَّ اطَّلَعَ فَقَالَ يَا مَعْشَرَ الرُّومِ هَلْ لَكُمْ فِي الْفَلَاحِ وَالرُّشْدِ وَأَنْ يَثْبُتَ مُلْكُكُمْ فَتُبَايِعُوا هَذَا النَّبِيَّ فَحَاصُوا حَيْصَةَ حُمُرِ الْوَحْشِ إِلَى الْأَبْوَابِ فَوَجَدُوهَا قَدْ غُلِّقَتْ فَلَمَّا رَأَى هِرَقْلُ نَفْرَتَهُمْ وَأَيِسَ مِنْ الْإِيمَانِ قَالَ رُدُّوهُمْ عَلَيَّ وَقَالَ إِنِّي قُلْتُ مَقَالَتِي آنِفًا أَخْتَبِرُ بِهَا شِدَّتَكُمْ عَلَى دِينِكُمْ فَقَدْ رَأَيْتُ فَسَجَدُوا لَهُ وَرَضُوا عَنْهُ فَكَانَ ذَلِكَ

آخِرَ شَأْنِ هِرَقْلَ رَوَاهُ صَالِحُ بْنُ كَيْسَانَ وَيُونُسُ وَمَعْمَرٌ عَنْ الزُّهْرِيِّ

அறிவிப்பாளர் : அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்

அபூ சுஃப்யான் குறைஷிகளின் பயணக் குழுவில் இருக்க அவரை அழைத்து வர ஹிர்கல் (ஒருவரை) அனுப்பினார். ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் அபூ சுஃப்யான் இன்னும் குறைஷி காஃபிர்களிடம் சமாதான ஒப்பந்தம் செய்த காலக் கட்டத்தில் இவர்கள் ஷாம் நாட்டுக்கு வியாபாரிகளாக (சென்று) இருந்தனர். ஆக, அவர் (-ஹிர்கல்) அவர்களை (குறைஷி வியாபாரிகளை) தனது சபைக்கு அழைத்தார். அவர்கள் அவரிடம் வந்தனர். இன்னும் அவர்கள் (- ஹிர்கலும் அவர்களின் அரசவை பிரமுகர்களும்) ஈலியா நகரத்தில் இருந்தனர். (ஈலியா என்பது இன்றைய குதுஸ் நகரமாகும். ஹிம்ஸ் உடைய மன்னராக இருந்த ஹிர்கல் அங்கிருந்து தனது நகரம் பாரசீகர்களிடமிருந்து விடுதலைப் பெற்றதற்கு அல்லாஹ்விற்கு நன்றி செலுத்த கால் நடையாக குதுஸ் வந்திருந்தார். இதை ஆசிரியர் ஜிஹாத் அத்தியாயத்தில் குறிப்பிடுகிறார்.) அவர் அவர்களை தனது சபைக்கு அழைத்தார். அவரை சுற்றி ரோம் நாட்டின் முக்கியஸ்தர்கள் (-மந்திரிகள், மத குருக்கள், பாதிரிகள்) இருந்தனர். பிறகு, அவர் அவர்களை அழைத்(து வர வைத்)தார். இன்னும் தனது மொழிபெயர்ப்பாளரையும் அழைத்(து வர வைத்)தார். ஆக, அவர் கேட்டார் : தன்னை நபி என கருதும் இந்த மனிதருக்கு உங்களில் யார் வம்சத்தால் மிக நெருக்கமானவர். ஆக, அபூ சுஃப்யான் கூறினார் : நான் அவர்களில் (அவருக்கு) வம்சத்தால் மிக நெருக்கமானவன்

என்று கூறினான். ஆக, அவர் கூறினார் : அவரை எனக்கு மிகவும் நெருக்கமாக்குங்கள்! இன்னும் அவர்களின் தோழர்களை சமீபமாக்குங்கள்! அதாவது, அவரின் முதுகுக்கு பின்னால் அவர்களை ஆக்குங்கள்! பிறகு அவர் தனது மொழிபெயர்ப்பாளருக்கு கூறினார் : நீ அவர்களிடம் சொல்! நிச்சயமாக நான் இவரிடம் இந்த மனிதரைப் பற்றி விசாரிக்கப் போகிறேன். அவர் என்னிடம் பொய் கூறினால் நீங்கள் அவரைப் பொய்யர் என்று கூறுங்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக அவர்கள் என் மீது நான் பொய் கூறியதாக (பிற மக்களிடம்) அறிவிப்பார்கள் என்பதைப் பற்றி (எனக்கு) வெட்கம் மட்டும் இல்லை என்றால் நான் அவரைப் பற்றி பொய் சொல்லியிருப்பேன்.

பிறகு, அவர் என்னிடம் எதைப் பற்றி விசாரித்தாரோ அதில் முதலாவதாவது, அவர் கேட்டார் : உங்களில் அவரின் வம்சம் எப்படிப்பட்டது?

நான் கூறினேன் : அவர் எங்களில் சிறப்பான வம்சமுடையவர்.

அவர் கேட்டார் : இவருக்கு முன்னர் இந்த பேச்சை உங்களில் யாரும் கூறி இருக்கிறாரா?

நான் கூறினேன் : இல்லை.

அவர் கேட்டார் : அவருடைய மூதாதையர்களில் அரசர் யாரும் இருந்திருக்கிறாரா?

நான் கூறினேன் : இல்லை.

அவர் கேட்டார் : ஆக, மக்களில் சிறப்பிற்குரியவர்கள்

(-செல்வந்தர்கள், தலைவர்கள்) அவரை பின்பற்றுகிறார்களா அல்லது அவர்களில் உள்ள பலவீனர்கள் (-ஏழைகள், அடிமைகள், சாதாரண பொதுமக்கள்) அவரை பின்பற்றுகிறார்களா?

நான் கூறினேன் : (அப்படி இல்லை) மாறாக, அவர்களில் பலவீனர்கள் (அவரை பின்பற்றுகிறார்கள்).

அவர் கேட்டார் : அவர்கள் அதிகமாகுகிறார்களா? அல்லது குறைகிறார்களா?

நான் கூறினேன் : (அப்படி இல்லை) மாறாக, அவர்கள் அதிகரிக்கின்றனர்.

அவர் கேட்டார் : அவர்களில் யாரும் தனது மார்க்கத்தை வெறுத்து - அதில் நுழைந்த பின்பு (அதிலிருந்து) - மதம் மாறுகிறார்களா?

நான் கூறினேன் : இல்லை.

அவர் கேட்டார் : அவர் கூறுகிற (இந்த) கூற்றை கூறுவதற்கு முன்னர் பொய்யைக் கொண்டு அவர் மீது நீங்கள் சந்தேகப்படுவதுண்டா? (-பொதுவான விஷயங்களில் அவர் பொய் பேசுவார் என்று நீங்கள் கருதியதுண்டா?)

நான் கூறினேன் : இல்லை.

அவர் கேட்டார் : அவர் ஒப்பந்தத்தை மீறுவாரா?

நான் கூறினேன் : இல்லை.

இப்போது நாங்கள் அவருடன் ஒரு (ஒப்பந்தம் செய்துகொண்ட) காலகட்டத்தில் இருக்கிறோம். இந்த காலகட்டத்தில் அவர் என்ன செய்வார் (-எப்படி நடந்து கொள்வார்) என்பதை நாங்கள் அறிய மாட்டோம்.

(நபி ﷺ அவர்களின் கண்ணியத்தை குறைக்கும் விதமாக) இந்த வார்த்தை அல்லாத வேறு எதையும் இதில் (-இந்த உரையாடலில்) நான் நுழைப்பதற்கு ஒரு வார்த்தையும் எனக்கு இடம் கொடுக்க வில்லை.

அவர் கேட்டார் : அவரிடம் நீங்கள் போர் செய்திருக்கிறீர்களா?

நான் கூறினேன் : ஆம்.

அவர் கேட்டார் : நீங்கள் அவருடன் செய்த போர் எப்படி இருந்தது?

நான் கூறினேன் : எங்களுக்கும் அவருக்கும் இடையில் போர் சந்தர்ப்பங்களுக்கு ஏற்ப அமைகின்றன. அவரும் எங்களை தாக்குகிறார். நாங்களும் அவரை தாக்குகிறோம். (-எங்களால் அவருக்கும் அவரால் எங்களுக்கும் சேதம் ஏற்படுகிறது.)

அவர் கேட்டார் : அவர் உங்களுக்கு எதை ஏவுகிறார்?

நான் கூறினேன் : அவர் கூறுகிறார், நீங்கள் அல்லாஹ் ஒருவனை மட்டும் வணங்குங்கள்! அவனுக்கு எதையும் நீங்கள் இணையாக்காதீர்கள்! உங்கள் மூதாதைகள் கூறியதை நீங்கள் விட்டுவிடுங்கள்! இன்னும் (நான் கூறினேன் : ) அவர் எங்களுக்கு தொழுகை, ஸகாத்தை, உண்மையை, ஒழுக்கத்தை,

உறவை சேர்ப்பதை ஏவுகிறார்.

ஆக, அவர் தனது மொழிபெயர்ப்பாளருக்கு கூறினார் : நீ அவருக்கு (-அபூ சுஃப்யானுக்கு) சொல், நான் உம்மிடம் அவரின் வம்சத்தைப் பற்றி கேட்டேன். நிச்சயமாக அவர் உங்களில் சிறப்பான வம்சத்தை உடையவர் என்று நீர் கூறினீர். ஆக, அப்படித்தான் ரஸூல்மார்கள் தங்கள் சமுதாயத்தில் சிறந்த வம்சத்தில் அனுப்பப்படுகிறார்கள்.

இன்னும் நான் உம்மிடம் (இவருக்கு முன்னர்) இந்த பேச்சை உங்களில் யாரும் கூறி இருக்கிறாரா? என்று நான் கேட்டேன். இல்லை என்று நீர் கூறினீர். ஆக, நான் கூறுகிறேன் : இவருக்கு முன்னர் இந்த கூற்றை யாரும் கூறி இருந்தால், இவருக்கு முன்னர் கூறப்பட்டதை பின்பற்றி கூறுகின்ற மனிதர் ஆவார் இவர் என்று நான் கூறி இருப்பேன்.

இன்னும் நான் உன்னிடம் கேட்டேன் : அவரின் மூதாதையர்களில் அரசர் யாரும் இருந்திருக்கிறாரா? என்று. இல்லை என்று நீர் கூறினீர். ஆக, நான் கூறுகிறேன் : அவருடைய மூதாதையர்களில் அரசர் யாரும் இருந்திருந்தால் அவர் தனது தந்தையின் ஆட்சியை தேடுகிற ஒரு மனிதர் என்று நான் கூறி இருப்பேன்.

இன்னும் நான் உம்மிடம் கேட்டேன் : அவர் கூறுகிற இந்த கூற்றை அவர் கூறுவதற்கு முன்னர் பொய்யைக் கொண்டு அவர் மீது நீங்கள் சந்தேகப்படுவதுண்டா? இல்லை என்று நீர் கூறினீர். மக்கள் விஷயத்தில் பொய் கூறுவதை அவர் தவிர்த்தவராக இருக்க, அல்லாஹ்வின் மீது அவர் பொய் சொல்பவராக

இருக்க மாட்டார் என்று திட்டமாக நான் அறிவேன்.

இன்னும் நான் உன்னிடம் கேட்டேன் : மக்களில் சிறப்பானவர்கள் அவரை பின்பற்றுகிறார்களா அல்லது அவர்களில் உள்ள பலவீனர்களா? நிச்சயமாக அவர்களில் உள்ள பலவீனமானவர்கள் அவரை பின்பற்றுகிறார்கள் என்று நீர் கூறினீர். (ஆம்.) அவர்கள்தான் ரஸூல்மார்களை பின்பற்றுகிறவர்கள் ஆவார்கள்.

இன்னும் நான் உம்மிடம் கேட்டேன் : அவர்கள் அதிகமாகுகிறார்களா? அல்லது குறைகிறார்களா? நிச்சயமாக அவர்கள் அதிகமாகுகிறார்கள் என்று நீர் கூறினீர். (ஆம்.) அவ்வாறுதான் ஈமானின் விஷயம் இருக்கும். இறுதியில் அது முழுமையடையும்.

இன்னும் நான் உம்மிடம் கேட்டேன் : அவர்களில் யாராவது தனது மார்க்கத்தை வெறுத்து அதில் நுழைந்த பின்னர் அதிலிருந்து மதம் மாறுகிறாரா? இல்லை என்று நீர் கூறினீர். (ஆம்) அப்படித்தான் ஈமான் அதன் மகிழ்ச்சி உள்ளங்களில் கலந்துவிடும்போது (அதை ஏற்றவர் யாரும் மதம் மாற மாட்டார்).

இன்னும் நான் உம்மிடம் கேட்டேன் : அவர் ஒப்பந்தத்தை மீறுவாரா? இல்லை என்று நீர் கூறினீர். (ஆம்) இப்படித்தான் ரஸூல்மார்கள் ஒப்பந்தத்தை மீற மாட்டார்கள்.

இன்னும் நான் உன்னிடம் கேட்டேன் : அவர் உங்களுக்கு எதை ஏவுகிறார். நிச்சயமாக அவர் உங்களுக்கு நீங்கள் அல்லாஹ்வை வணங்க வேண்டும், அவனுக்கு நீங்கள் எதையும் இணையாக்கக்

கூடாது என்று ஏவுகிறார்; இன்னும் உங்களை சிலைகளை வணங்குவதை விட்டும் தடுக்கிறார்; இன்னும் தொழுகையை, உண்மையை, ஒழுக்கத்தை உங்களுக்கு ஏவுகிறார் என்று நீர் கூறினீர்.

நீர் கூறுவது உண்மையாக இருந்தால் அவர் எனது இந்த இரண்டு பாதங்கள் இருக்கும் இடத்தை ஆட்சி செய்வார். நிச்சயமாக அவர் வெளிப்படுவார் என்று நான் அறிந்திருந்தேன். நிச்சயமாக அவர் உங்களில் உள்ளவர் என்று நான் எண்ணியிருக்க வில்லை. நிச்சயமாக நான் அவரிடம் சென்றுவிடுவேன் என்று நான் உறுதியாக அறிந்தால் அவரை சந்திப்பதற்கு நான் சிரமம் எடுத்திருப்பேன். இன்னும் நான் அவரிடம் இருந்திருந்தால் அவரின் பாதங்களை கழுவி இருப்பேன்.

பிறகு அவர் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களின் கடிதத்தை வரவழைத்தார். அந்த கடிதத்தை புஸ்ரா நகர அதிகாரியிடம் (நபித்தோழர்) திஹ்யா அனுப்பி இருந்தார். (கடிதத்தை கொண்டு வந்த) அவர் அதை ஹிர்கலிடம் கொடுத்தார். அவர் அதைப் படித்தார். ஆக, அதில் எழுதப்பட்டிருந்ததாவது :

**بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيمِ مِنْ مُحَمَّدٍ عَبْدِ اللهِ وَرَسُولِهِ إِلَى هِرَقْلَ عَظِيمِ الرُّومِ سَلَامٌ عَلَى مَنْ اتَّبَعَ الْهُدَى أَمَّا بَعْدُ فَإِنِّي أَدْعُوكَ بِدِعَايَةِ الْإِسْلَامِ أَسْلِمْ تَسْلَمْ يُؤْتِكَ اللهُ أَجْرَكَ مَرَّتَيْنِ فَإِنْ تَوَلَّيْتَ فَإِنَّ عَلَيْكَ إِثْمَ الْأَرِيسِيِّينَ وَ﴿يَا أَهْلَ الْكِتَابِ تَعَالَوْا إِلَى كَلِمَةٍ سَوَاءٍ بَيْنَنَا وَبَيْنَكُمْ أَنْ لَا نَعْبُدَ إِلَّا اللهَ وَلَا نُشْرِكَ بِهِ شَيْئًا وَلَا يَتَّخِذَ بَعْضُنَا بَعْضًا أَرْبَابًا**

مِنْ دُونِ اللّٰهِ فَإِنْ تَوَلَّوْا فَقُولُوا اشْهَدُوا بِأَنَّا مُسْلِمُونَ ○ ﴾

பொருள் : பேரருளாளன், பேரன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்... அல்லாஹ்வுடைய அடியாரும் அவனது தூதருமாகிய முஹம்மதிடமிருந்து ரோம் நாட்டின் மதிப்பு மிக்க பெரியவருக்கு எழுதப்படுகிறது. நேர்வழியை பின்பற்றுவோருக்கு ஈடேற்றம் உண்டாகுக! இதற்கு பின்னர் நான் கூறவருவதாவது, நிச்சயமாக நான் உமக்கு இஸ்லாமிய மார்க்கத்தின் அழைப்பை கொடுக்கிறேன். நீ முஸ்லிமாகிவிடு! ஈடேற்றம் பெறுவீர்! அல்லாஹ் உமக்கு இருமுறை கூலி கொடுப்பான். நீர் விலகி சென்றால் நிச்சயமாக உம்மீது விவசாயிகளின் பாவம் (-நீர் மறுத்துவிடுவதால் உமது ஆட்சியின் கீழ் இருக்கும் பொதுமக்களின் குற்றம்) சுமத்தப்படும். (அல்லாஹு தஆலா கூறுகிறான் : அதன் பொருளாவது) வேதமுடையோரே! எங்களுக்கும் உங்களுக்கும் இடையே சமமான (-இருவரும் ஏற்றுக் கொண்ட) ஒரு சட்டத்திற்கு நீங்கள் வாருங்கள்! அதாவது, நாம் அல்லாஹ்வை அன்றி யாரையும் வணங்கக் கூடாது, இன்னும் அவனுக்கு எதையும் இணையாக்கக் கூடாது. இன்னும் நம்மில் சிலர் சிலரை அல்லாஹ்வை அன்றி கடவுள்களாக ஆக்கக் கூடாது. அவர்கள் (இதை ஏற்காமல் புறக்கணித்து) விலகி சென்றால், (அவர்களிடம்) நிச்சயமாக நாங்கள் முஸ்லிம்கள் என்பதற்கு நீங்கள் சாட்சி கூறுங்கள் என்று கூறிவிடுங்கள்!

அபூ சுஃப்யான் கூறுகிறார் : அவர் (-ஹிர்கல்) கூற இருந்ததை கூறிமுடித்தபோது, இன்னும் கடிதத்தை படித்து முடித்தபோது அவரிடம் கூச்சல் அதிகமாகிவிட்டது. இன்னும் சப்தங்கள்

உயர்ந்துவிட்டன. நாங்கள் வெளியேற்றப்பட்டோம். ஆக, நாங்கள் வெளியேற்றப்பட்டபோது நான் எனது தோழர்களிடம் கூறினேன், அபூ கப்ஷா உடைய மகனின் காரியம் பெரிதாகிவிட்டது. நிச்சயமாக, அவரை ரோமர்களின் மன்னர் பயப்படுகிறார். நிச்சயமாக அவர் (அனைவரையும்) மிகைத்து வெளிப்படுவார் என்று நான் உறுதி கொண்டவனாக இருந்தேன். இறுதியில் அல்லாஹ் எனக்குள் இஸ்லாமை புகுத்திவிட்டான்.

ஈலியா நரகத்தின் அதிபராகிய இப்னுன் நாஊர் (அல்லது இப்னுன் நாத்தூர்) என்பவரும் ஹிர்கலும் கிறிஸ்த்துவர்களுக்கு மதத் தலைவர்களாகவும் இருந்தனர். அவர் (-இப்னுன் நாஊர்) செய்தி கூறுகிறார் : நிச்சயமாக ஹிர்கல் ஈலியா நகரத்திற்கு வந்தபோது ஒரு நாள் மன நெருக்கடிக்கு ஆளானவராக, மிகுந்த கவலைக்குள்ளானவராக ஆகிவிட்டார். ஆகவே, அவருடைய அரச பிரமுகர்களில் சிலர், உமது தோற்றத்தை நாங்கள் விகாரமாக பார்க்கிறோம் என்று கூறினர். ஹிர்கல் நட்சத்திரங்களை கணக்கீடு செய்யும் குறிகாரராக (-ஜோசியக்காரராக) இருந்தார். ஆக, அவர்கள் அவரிடம் (அவர் கவலையாக இருப்பதற்குரிய காரணத்தை) விசாரித்தபோது அவர் அவர்களுக்கு கூறினார் : நிச்சயமாக நான் நட்ச்சத்திரங்களை கணக்கிட்டபோது விருத்தசேதனம் செய்பவர்களின் மன்னர் வெளிப்பட்டுவிட்டதாக பார்த்தேன். இந்த மக்களில் யார் விருத்த சேதனம் செய்கிறார்? அவர்கள் கூறினார்கள் : யூதர்களைத் தவிர வேறு யாரும் விருத்தசேதனம் செய்வதில்லை. அவர்களின் பிரச்சினை உம்மை கவலையில் ஆழ்த்த வேண்டாம். உமது ஆட்சியில் உள்ள நகரங்களுக்கு நீர் கடிதம்

எழுதுவீராக! அவர்கள் தங்களிடம் இருக்கிற யூதர்களை கொன்றுவிடுவார்கள். அவர்கள் அவ்வாறு பேசிக்கொண்டிருந்த நிலையில் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களின் செய்தியை அறிவிக்கின்ற ஒரு நபரை ஹிர்கலிடம் கொண்டுவரப்பட்டது. அந்த நபரை கஸ்ஸான் நாட்டு மன்னர் (ஹிர்கலிடம்) அனுப்பி இருந்தார். ஹிர்கல் அவரிடம் செய்தியை கேட்டறிந்தபோது இவரை அழைத்து சென்று இவர் விருத்த சேதனம் செய்தவரா என்று பாருங்கள் என்று கூறினார். அவர்கள் அவரைப் பார்த்துவிட்டு அவர் விருத்த சேதனம் செய்தவர் என்று அவருக்கு செய்தி கூறினர். அந்த நபரிடம் அரேபியர்களைப் பற்றி ஹிர்கல் விசாரித்தார். அதற்கவர் அவர்கள் விருத்த சேதனம் செய்வார்கள் என்று கூறினார். அதற்கு ஹிர்கல் கூறினார் : இதோ இந்த மக்களின் ஆட்சி இப்போது வெளிப்பட்டுவிட்டது.

ரூமியா (ரோமியா) நகரத்தில் உள்ள தனது தோழர் ஒருவருக்கு கடிதம் எழுதினார். (வானசாஸ்த்திர) கல்வியில் அவர் அவருக்கு சமமானவராக இருந்தார். பிறகு ஹிர்கல் ஹிம்ஸ் புறப்பட்டு வந்தார். அவர் ஹிம்சில் இருக்கும்போதே அவரது தோழரிடமிருந்து, நபி வெளிப்படுவார்கள் என்ற ஹிர்கலின் கருத்தை அமோதித்து கடிதம் வந்து விட்டது. நிச்சயமாக அவர் நபி என்று அதில் கூறப்பட்டிருந்தது. உடனே, ஹிர்கல் ரோம் நாட்டின் பெரியோர்களை ஹிம்சில் உள்ள தனது ஒரு மாளிகையில் ஒன்று கூட அனுமதித்தார். பிறகு அதன் வாசல்கள் எல்லாம் அடைக்கப்படும்படி கட்டளை இட்டார். ஆக, வாசல்கள் அடைக்கப்பட்டன. பிறகு அவர் (அவர்கள் முன் (மன்னர்கள் தோன்றும் மேல் அறையிலிருந்து) தோன்றினார்.

இன்னும் கூறினார் : ரோம் நாட்டு மக்களே! உங்களுக்கு வெற்றி இன்னும் நல்லறிவு பெறுவதில் ஆசை இருக்கிறதா? இன்னும் உங்கள் ஆட்சி உறுதியாக இருப்பதற்கு ஆசை இருக்கிறதா? அப்படி இருந்தால் நீங்கள் இந்த நபிக்கு சத்திய வாக்குப் பிரமானம் செய்து கொடுங்கள்! (-அவரை நபியாக ஏற்றுக் கொள்ளுங்கள்!) ஆக, அவர்கள் காட்டு கழுதைகள் தலைதெறிக்க ஓடுவதுபோல் வாசல்களை நோக்கி ஓடினர். அவை பூட்டப்பட்டிருப்பதை அவர்கள் கண்டனர். இவர்களின் ஓட்டத்தை பார்த்து, (இவர்கள்) நம்பிக்கை கொள்வதிலிருந்து ஹிர்கல் நிராசை அடைந்தபோது இவர்களை என்னிடம் மீண்டும் கொண்டுவாருங்கள் என்றார். இன்னும் கூறினார் : நிச்சயமாக நான் சற்றுமுன் கூறிய எனது வார்த்தையை நான் ஏன் கூறினேன் என்றால் உங்கள் மார்க்கத்தின் மீது உங்களுக்கு பற்று உறுதியாக இருப்பதை சோதிப்பதற்காகத்தான். ஆக, திட்டமாக நான் (அதைப்) பார்த்துவிட்டேன். உடனே, அவர்கள் அவருக்கு சிரம் வணங்கினர். இன்னும் அவரைப் பொருந்தி கொண்டனர். இதுதான் ஹிர்கலின் கடைசி நிலையாக இருந்தது. (-அதாவது, அவர் இஸ்லாமை ஏற்கவில்லை, நபியை நம்பிக்கை கொள்ளவில்லை.)

இதை ஸாலிஹ் இப்னு கைசான், யூனுஸ், மஃமர் ஆகியோர் ஸுஹ்ரி இடமிருந்து அறிவிக்கிறார்கள்.

## விளக்கம் இன்னும் பாடத்துடன் ஹதீஸின் தொடர்பு

அல்லாஹ்வே நல்லறிவை தரப் போதுமானவன். எல்லாப் புகழும் அல்லாஹ்விற்கே!

வஹ்யின் ஆரம்பம் என்ற பாடத்தின் ஆரம்பத்தில் நிய்யத் - எண்ணம் தொடர்பான ஹதீஸை ஆசிரியர் பதிவு செய்து அல்லாஹ்வையும் தூதரையும் நாடுபவர்களுக்கு அல்லாஹ்வையும் தூதரையும் நோக்கி செல்வது இலகுவாகிவிடும். உலகத்தை விரும்புகிறவர்களுக்கு உலகம்தான் கிடைக்கும் என்ற கருத்தை விளக்கினார். இறுதியாக இந்த பாடத்தில் ஹிர்கலின் வரலாறை பதிவு செய்து ஹிர்கலின் நோக்கம் உலகமாக இருந்தது. அவனது எண்ணம் உண்மையாக இருந்திருந்தால் அவன் அதைக் கொண்டு நற்பலன் பெற்றிருப்பான். இல்லை என்றால் அவன் நஷ்டமடைந்துவிடுவான் (-ஹிர்கலின் நிகழ்விலும் அவனது எண்ணம் சரியில்லை என்பதால் அவன் நேர்வழி பெறவில்லை என்பதை ஆசிரியர் சுட்டிக் காட்டுகிறார்) என்று இப்னு ஹஜர் கூறுகிறார்.

வஹ்யின் ஆரம்பம் என்ற தலைப்பில் இந்த ஹதீஸை ஆசிரியர் பதிவு செய்ததின் தொடர்பு பற்றி இப்னு ஹஜர் கூறுவதாவது : முதலாவதாக : இந்த ஹதீஸில் நபி ﷺ அவர்களின் ஆரம்ப காலத்தில் நபியவர்களுடன் மக்கள் எப்படி நடந்து கொண்டார்கள் என்ற விளக்கம் உள்ளது. (-அதாவது, வஹ்யின் தொடக்கம் எப்படி இருந்தது என்பதையும் கூறிவிட்டு வஹ்யின் தொடக்கத்தில் மக்கள் எப்படி இருந்தார்கள் என்பதையும் ஆசிரியர் சுட்டிக் காட்ட விரும்பி இந்த ஹதீஸை இங்கு பதிவு செய்துள்ளார்கள்.) மேலும் இந்த பாடத்தின் தலைப்பில் ஆசிரியர் பதிவு செய்த (அல்குர்ஆன் 4 : 163) வசனமும் இந்த ஹதீஸில் கூறப்பட்டுள்ள வசனமும் ஒரே கருத்தை கொடுக்கிறது. அதாவது,

﴿سَوَاءٍ بَيْنَنَا وَبَيْنَكُمْ﴾

பொருள் : உங்களுக்கும் எங்களுக்கும் இடையில் சமமான ஒரு சட்டத்தின் பக்கம் வாருங்கள்!

எல்லா நபிமார்களுக்கும் ஒரே மார்க்கம்தான் கொடுக்கப்பட்டது. அந்த மார்க்கத்தை நிலைநிறுத்துங்கள் என்று அவர்களுக்கு கட்டளை கொடுக்கப்பட்டது. நூஹ் நபியிலிருந்து நமது நபி ﷺ வரை எல்லா நபிமார்களும் ஒரே மார்க்கம் உடையவர்களாக இருந்தார்கள் என்பதை இந்த வசனம் உறுதி செய்கிறது. (-அதாவது பாடத்தின் ஆரம்பத்தில் கூறப்பட்ட வசனத்திற்கு பொருத்தமான வசனம் இந்த ஹதீஸில் இடம் பெறுவதால் இந்த ஹதீஸை வஹ்யின் தொடக்கம் என்ற பாடத்தில் இறுதியில் கொண்டுவந்து பாடத்தை நிறைவு செய்கிறார்.

இந்த ஹதீஸ் ஹிர்கல் மன்னருக்கும் அபூ சுஃப்யானுக்கும் இடையில் நடந்த உரையாடல் ஆகும். இந்த சம்பவம் நடக்கும்போது அபூ சுஃப்யான் இஸ்லாமை ஏற்றிருக்கவில்லை. அவர் ஹிஜ்ரி 6ல் ஹுதைபிய்யா ஒப்பந்தம் நிகழ்ந்த பின்பு மக்கா வியாபாரிகளுடன் ஷாம் தேசம் வந்திருந்தார். நபி ﷺ, அவர்கள் திஹ்யா என்ற தோழரிடம் ஹிர்கலுக்கு கடிதம் ஒன்றை கொடுத்து அனுப்பி இருந்தார்கள். அந்த கடிதம் ஹிஜ்ரி 7 முஹர்ரம் மாதத்தில் ஹிர்கலுக்கு கிடைக்கப் பெற்ற பின்னர் நடந்த நிகழ்வுதான் இதுவாகும். முதலில் அந்த கடிதத்தை புஸ்ராவின் அதிகாரியிடம் திஹ்யா கொடுக்க, பிறகு அந்த கடிதம் அங்கிருந்து திஹ்யா அவர் வாயிலாக ஹிர்கலிடம் கொண்டு வந்து கொடுத்தார்.

இந்த கடிதம் கிடைக்கப் பெற்ற பின்னர் நபி ﷺ அவர்களைப் பற்றி விசாரிக்க ஹிர்கல் நபியவர்களின் சமுதாயத்தைச் சேர்ந்த மனிதரை தேடி தனது காவல் அதிகாரிகளுக்கு கட்டளையிட்டார். நீங்கள் ஷாம் தேசத்தை தலைகீழாக புரட்டி போட்டு விடுங்கள். எனக்கு இந்த மனிதரின் சமுதாயத்தில் உள்ள ஒருவரை கொண்டுவந்து விடுங்கள் என்று கூறினார். அப்போது அபூ சுஃப்யானும் அவரது தோழர்களும் கஸ்ஸா நகரத்தில் இருந்தார்கள். அங்கிருந்து அவர்களை ஹிர்கலின் காவல்துறை அதிகாரிகள் பலவந்தமாக அழைத்து வந்தார்கள் என்று அபூ சுஃப்யான் அறிவித்த ஓர் அறிவிப்பை அபூ நுஐம் தலாயில் நுபுவ்வா நூலில் பதிவு செய்திருக்கிறார் என்று இப்னு ஹஜர் கூறுகிறார்.

இரண்டாவது முறையாக நபி ﷺ தபூக் போருக்கு வந்திருந்தபோது ஹிஜ்ரி ஒன்பதாம் ஆண்டு மீண்டும் ஹிர்கலுக்கு கடிதம் அனுப்பினார்கள்.

ஹிர்கல் தனது ஆட்சிக்காகவும் உயிர் மேல் இருந்த பயத்தினாலும் இறுதி வரை இஸ்லாமை ஏற்கவில்லை. கடைசியாக அவர் ஷாம் நாட்டை விட்டு குஸ்தன்தீனிய்யாவிற்கு சென்று விட்டார் என்றும் அப்படி செல்லும்போது ஷாம் மக்களுக்கு நீங்கள் இஸ்லாமை ஏற்றுக்கொள்ளுங்கள் அல்லது ஜிஸ்யா கொடுங்கள் அல்லது நபி ﷺ அவர்களுடன் சமாதான ஒப்பந்தம் செய்து கொள்ளுங்கள் என்று கூற அவர்கள் இவற்றில் எதையும் ஏற்கவில்லை என்றும் அப்போது அவர், சூரியா (சிரியா) பூமியே உன் மீது ஸலாம் உண்டாகட்டும் என்று இறுதி

சலாம் கூறுவதாக கூறிவிட்டு விரைந்து குஸ்தன்தீனிய்யாவிற்கு சென்றுவிட்டார் என்றும் இப்னு இஸ்ஹாக் கூறுவதாக இப்னு ஹஜர் பதிவு செய்துள்ளார்.

இந்த ஹதீஸின் விளக்கத்தில் இப்னு ஹஜர் பதிவு செய்கிற சில குறிப்புகளை இங்கே எழுதுகிறோம்.

**هِرَقْل** ஹிர்கல் ரோம் நாட்டு மன்னரின் பெயராகும் இது. பொதுவாக ரோம் நாட்டு மன்னர்களை கைசர் என்ற புனைப் பெயரைக் கொண்டு அழைக்கப்படும்.

அபூ சுஃப்யான் உடன் இருந்த வியாபாரக் குழுவில் முப்பது நபர்கள் இருந்தார்கள் என்று ஹாகிம், அல்இக்லீல் என்ற நூலில் கூறுவதாகவும் இப்னுஸ் சகன் என்பவர் இருபது நபர்கள் இருந்தார்கள் என்று கூறுகிறார்.

இப்ராஹீம் நபியுடைய மகனார் இஸ்ஹாக் நபியுடைய மகனார் **عيص** ஈஸ் உடைய சந்ததிகளில் வந்தவர்களே ரோமர்கள். பிற்காலத்தில் இவர்களுடன் ஷாம் நாட்டில் வசித்த பல அரபு இனப் பிரிவுகள் கலந்துவிட்டனர். முஸ்லிம்கள் ஷாம் நாட்டை வெற்றிகொண்ட போது அந்த அரேபியர்களை அங்கிருந்து முஸ்லிம்கள் அப்புறப்படுத்தினர். அவர்கள் ரோம் நாட்டுக்கு சென்று குடியேறி அங்குள்ளவர்களுடன் கலந்தனர். அந்த அரேபியர்கள் கஸ்ஸான் கோத்திரத்தில் வந்த **تَنُوخ** தனூக், **بَهْرَاء** பஹ்ரா, **سُلَيْح** ஸுலைஹ் ஆகிய வம்சத்தை சேர்ந்தவர்களாக இருந்தனர்.

சிறப்பானவர்கள் பின்பற்றுகிறார்களா அல்லது

பலவீனமானவர்களா என்பதில் சிறப்பானவர்கள் என்ற பதம் அகம்பாவம், பெருமை உடையவர்களை குறிக்கிறது. சிறப்பானவர்கள் எல்லோரையும் அல்ல. ஏனெனில், அபூ பக்ர், உமர் போன்ற பல சிறப்பானவர்கள் இஸ்லாமை ஏற்றனர்.

**دحية بن خَليفة الكلبي** திஹ்யா இப்னு கலீஃஃபா அல் கல்பி இவர் கம்பீரமான ஸஹாபீ ஆவார். திஹ்யா என்றால் ஏமன் நாட்டு பாஷையில் தலைவர் என்று பொருள். மிக அழகிய முகம் உடையவராக இருந்தார். ஆரம்பக் காலத்தில் இஸ்லாமை ஏற்றார். இவர் ஹஜ்ரி ஆறுடைய கடைசியில் ஹுதைபிய்யாவிலிருந்து திரும்பிய பின்னர் நபியவர்களின் கடிதத்தை பெற்றுக்கொண்டு புறப்பட்டு ஹிர்கலிடம் ஹிஜ்ரி ஏழு முஹர்ரம் மாதத்தில் வந்து சேர்ந்தார். இவ்வாறு ஹிர்கல் கூறுகிறார்.

திஹ்யா, முஆவியாவின் ஆட்சி காலத்தில் இறந்தார்.

***بُصْرَى*** இது மதீனா இன்னும் திமஷ்க் ஆகிய இரு நகரங்களுக்கு நடுவில் உள்ள ஒரு நகரமாகும். இதை ஹவ்றான் என்றும் கூறப்படுகிறது. இதன் தலைவராக அல்ஹாரிஸ் இப்னு அபீ ஷம்ர் அல் கஸ்ஸானி இருந்தார்.

ஆசிரியர் ஜிஹாத் அத்தியாயத்தில் பதிவு செய்துள்ள அறிவிப்பில் வந்துள்ள நபியவர்களின் கடிதத்தில் **أَسْلِمْ أَسْلِمْ يُؤْتِك** அஸ்லிம் அஸ்லிம் என்று இரு முறை வந்துள்ளது. கட்டளையை உறுதி செய்வதற்காக, அழுத்தம் தருவதற்காக இவ்வாறு கூறப்பட்டிருக்கலாம். இன்னும், முதல் அஸ்லிம் என்பதற்கு இஸ்லாமில் நுழைந்து விடு என்ற கருத்தும் இரண்டாவது அஸ்லிம் என்பதைக் கொண்டு இஸ்லாமில்

நீடித்து நிரந்தரமாக இரு என்ற கருத்தும் நாடப்பட்டதாக இருக்க வாய்ப்புண்டு. இதற்கு உதாரணமாக குர்ஆனில் ஒரு வசனம் உள்ளது.

﴿يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا آمِنُوا بِاللَّهِ﴾

பொருள் : நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வை நம்பிக்கை கொள்ளுங்கள்! (அல்குர்ஆன் 4 : 136)

அதாவது, நம்பிக்கையாளர்களே! நம்பிக்கையில் நீடித்து நிரந்தரமாக இருங்கள்!

அல்லாஹ் உமக்கு இரு முறை கூலி கொடுப்பான் என்று கூறப்பட்டதின் காரணம் : முதாலாவதாக, அவர் தனது நபியை நம்பிக்கை கொண்டதற்காக, இரண்டாவதாக, நபி முஹம்மது ﷺ அவர்களை நம்பிக்கை கொள்வதற்காக ஆகும். அல்லது முதலாவதாக அவர் இஸ்லாமை ஏற்பதற்காகவும், இரண்டாவதாக அவரின் மக்கள் இஸ்லாமை ஏற்பதற்காகவும் ஆகும்.

**يَا أَهْلَ الْكِتَاب** வேதக்காரர்களே! என்று ஆரம்பமாகும் இந்த வசனத்தை ஹிர்கல் இன்னும் அவரின் மக்களுக்கு நபி ﷺ அவர்கள் எழுதி அனுப்பினார்கள். ஹிர்கலும் அவரின் மக்களும் பனூ இஸ்ராயீலில் உள்ளவர்கள் இல்லை. ஆகவே, இதிலிருந்து தெரிய வருவதாவது, யாரெலாம் அஹ்லுல் கிதாப் - வேதக்காரர்களின் மார்க்கத்தை ஏற்றுக் கொண்டார்களோ அவர்கள் அனைவரும் அவர்களுடன் திருமண உறவு வைப்பது, அவர்கள் அறுத்தவற்றை புசிப்பது ஆகிய அஹ்லுல் கிதாப் உடைய சட்டத்தில் வந்து விடுவார்கள். இவ்வாறு

இப்னு ஹஜர் தமது ஆசிரியர் இதிலிருந்து ஆய்வு செய்து கூறியதாக குறிப்பிடுகிறார். வேறு சிலர் இதற்கு மாற்றமாக கூறுகின்றனர் : அஹ்லுல் கிதாப் என்பது இஸ்ரவேலர்களை மட்டும் எடுத்துக் கொள்ளும். அல்லது யூத, கிறிஸ்த்துவ மதம் மாற்றப்படுவதற்கு முன்னர் அவர்களின் மூதாதைகள் அதில் நுழைந்திருந்தால் அவர்களை அஹ்லுல் கிதாப் என்ற பதம் எடுத்துக்கொள்ளும். அல்லாஹ் மிக அறிந்தவன்.

நீர் விலகி சென்றால் நிச்சயமாக உம்மீது விவசாயிகளின் பாவம் (-நீர் மறுத்துவிடுவதால் உமது ஆட்சியின் கீழ் இருக்கும் பொதுமக்களின் குற்றம்) சுமத்தப்படும் என்ற நபியவர்களின் கூற்று,

﴿وَلَا تَزِرُ وَازِرَةٌ وِزْرَ أُخْرَىٰ ۝﴾

பாவம் செய்த ஓர் ஆன்மா பாவம் செய்த இன்னொரு ஆன்மாவின் பாவத்தினால் குற்றவாளியாக ஆகாது. (அல்குர்ஆன் 6 : 164)

என்ற வசனத்திற்கு முரணாகாது. ஏனெனில், ஒரு பாவி இன்னொரு பாவியின் சுமையை சுமக்கமாட்டார் என்பது வேறு, அதே நேரத்தில் பாவம் செய்த ஒருவர் இன்னொருவர் பாவம் செய்வதற்கு காரணமாக இருந்தால் அப்போது அவர் இரு குற்றங்களுக்கு பொறுப்பாளராக ஆகிவிடுகிறார் என்பது வேறு.

நபி ﷺ அவர்களின் கடிதத்தில் அஸ்லிம் என்ற வார்த்தையில் கட்டளையிடுவதும்; தஸ்லம் வ யுஃதிகல்லாஹு என்ற

வார்த்தையில் ஆர்வமூட்டுதலும்; ஃப இன் தவல்லைத்த என்ற பதத்தில் எச்சரிக்கையும்; ஃப இன்ன அலைக்க என்ற பதத்தில் அச்சுறுத்தலும்; யா அஹ்லல் கிதாப் என்று கூறி இருப்பதில் அன்பை வெளிப்படுத்துவதும் உள்ளது. அல்லாஹ்வின் தூதர் ﷺ மிக விசாலமான கருத்துகளை சுருக்கமான வார்த்தைகளில் பேசும் திறமை கொடுக்கப்பட்டவர்கள் என்பதை இதிலிருந்து மிகத் தெளிவாக நாம் புரியலாம்.

கேள்வி : நட்சத்திர கணக்குகளின் அடிப்படையில் குறிபார்க்கும் செய்திகளை ஆசிரியர் எப்படி இங்கு பதிவு செய்தார்? இதில் அவர்களின் கருத்தை பலப்படுத்துவது இல்லையா?

பதில் : ஆசிரியரின் நோக்கம் அதுவல்ல. நபி ﷺ அவர்களின் நபித்துவத்தின் முன்னறிவிப்பு பல வழிகளில் வந்துள்ளது. இன்னும் குறி சொல்பவர், நட்சத்திர கணக்கீடு பார்ப்பவர், இன்னும் அவர் நல்லவரோ கெட்டவரோ, மனிதரோ, ஜின்னோ எல்லோருடைய நாவின் வாயிலாக முன்னறிவிப்பு வந்துள்ளது என்பதை கூறுவதுதான் நோக்கமாகும். இது அறிஞரின் மிக நூதனமான சுட்டிக் காட்டுதலாகும். அல்லது ஆதாரம் கூறுவோரின் மிக நூதனமான அணுகுமுறையாகும்.

தஸ்கரா என்றால் சுற்றி பல சிறு அறைகளை உடைய மாளிகை ஆகும். மக்களை எல்லாம் அந்த சிறு அறைகள் வழியாக வரக் கூறி அவற்றின் வாசல்களை ஹிர்கல் அடைத்து விட்டார். பிறகு மாளிகைக்கு மேல் புறத்தில் உள்ள அறையிலிருந்து அந்த மக்களிடம் பேசினார். அதற்கு காரணமாவது, இதற்கு முன்னர் **ضُغَاطِر** மூகாதிர் என்பவர் இஸ்லாமை வெளிப்படுத்தியபோது

அவரை ரோமர்கள் கொன்று விட்டனர். அதுபோன்று தன்னை கொன்றுவிடக் கூடாது என்பதாகும்.

இப்னு இஸ்ஹாக் பதிவு செய்கிறார் : ஹிர்கலிடம் திஹ்யா வந்தபோது முதலில் அவரை ரோம் நாட்டில் உள்ள மன்னர் முகாத்திர் இடம் அனுப்பி வைத்தார். அவர் என்னை விட சரியான பதிலை கூறுவார் என்று அவரிடம் அனுப்பி வைத்தார். திஹ்யா அவருக்கு இஸ்லாமை கூறியவுடன் அவர் இஸ்லாமை ஏற்று முஸ்லிமாக மாறிவிட்டார். இன்னும் தனது கிறிஸ்த்துவ மத ஆடையை கழட்டிவிட்டு வெள்ளை நிற ஆடையை அணிந்துகொண்டார். பிறகு ரோமர்களுக்கு முன் வந்து தான் இஸ்லாமை ஏற்றுக்கொண்டதை எடுத்துக் கூறி அவர்களையும் இஸ்லாமின் பக்கம் அழைத்து ஏகத்துவத்தின் சாட்சியத்தை பகிரங்கமாக கூறினார். ஆனால், ரோமர்கள் இஸ்லாமை ஏற்கவில்லை. அவரை கொன்றும் விட்டனர். இந்த நிலை தனக்கு ஏற்பட்டுவிடக்கூடாது என்று பயந்து ஹிர்கல் தந்திரம் செய்தார். இறுதியில் அவர் இஸ்லாமை ஏற்காமல் இறந்துவிட்டார். இன்னும் ஹிர்கல் சபையில் இருந்த முக்கிய பிரமுகர் ஒருவரும் இஸ்லாமை ஏற்று, உமது நபியிடம் சென்று எனது சலாமை அவருக்கு கூறவும்; நிச்சயமாக வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறவே இல்லை, நிச்சயமாக முஹம்மது அல்லாஹ்வின் தூதர் என்று நான் சாட்சி கூறுகிறேன்; நிச்சயமாக நான் அவரை நம்பிக்கை கொண்டேன்; இன்னும் அவரை உண்மைப் படுத்துகிறேன் என்று திஹ்யாவிடம் கூறிவிட்டு மக்களிடம் வந்து தான் இஸ்லாமை ஏற்றதை கூறியவுடன் அவரையும்

ஹிர்கலின் மக்கள் கொன்று விட்டார்கள்.

ஹிம்ஸ் நகரம் ஹிர்கலின் ஆட்சி பீடமாக இருந்தது. இது திமஷ்க் நகரத்தை விட மிகப் பெரியதாக இருந்தது. பிறகு ஹிஜ்ரி பதினாறாம் ஆண்டு அபூ உபைதாவின் தலைமையில் நடந்த போரில் முஸ்லிம்கள் அதை வெற்றி கொண்டார்கள். அதாவது, இந்த சம்பவம் நடந்து வெறும் பத்து ஆண்டுகளில்.

ஹிர்கல் நபி ﷺ அவர்களின் கடிதத்தை நீண்ட காலம் பாதுகாத்து வைத்திருந்தார்; அவருக்குப் பின்னர் அவரின் பிள்ளைகள் அதை அரச காஜானாவில் பாதுகாப்பாக வைத்திருந்தனர்; ஹிஜ்ரி ஏழாவது நூற்றாண்டில் வாழ்ந்த அப்துல் மலிக் இப்னு ஸஅத் என்ற முஸ்லிம் படைத்தளபதி அதைப் பார்த்தார். இவ்வாறு விரிவான ஒரு வரலாறை ஸுஹைலி பதிவு செய்துள்ளார்.

ஹிர்கலை விட பெரிய வேறு ஒரு **داهية** - தாஹியாவை நான் பார்த்ததில்லை என்று அபூ சுஃப்யான் கூறுகிறார்.

**داهية** தாஹியா என்றால் **عاقل جيّدُ الرأي بصيرٌ بالأمور** சிறந்த புத்திசாலி, ஆலோசனைக் கூறுவதில், அறிவாக யோசிப்பதில் வல்லவர், காரியங்களை உற்று நோக்குபவர், தொலை நோக்குப் பார்வை உள்ளவர் என்று பொருளாகும்.

அரபுகள் யாரையும் மதிப்பு குறைவாக பேசுவதாக இருந்தால் அவரின் மூதாதையர்களில் அறியப்படாத ஒருவரின் பக்கம் அவரை இணைத்துக் கூறுவார்கள். அந்த அடிப்படையில்தான் இப்னு அப்தில்லாஹ் என்று கூறாமல் இப்னு அபீ கப்ஷா என்று நபி ﷺ அவர்களை அபூ சுஃப்யான் குறிப்பிட்டார். அவர் எந்த

தலைமுறையில் உள்ள பாட்டன் என்பதில் பல கருத்துக்கள் உள்ளன. (ஃபத்ஹ்)

## படிப்பினைகள்

இந்த அறிவிப்பிலிருந்து பல பாடங்களையும் படிப்பினைகளையும் நாம் கற்கிறோம்.

1. நபி ﷺ அவர்கள் அல்லாஹ்வின் பக்கம் மக்களை அழைப்பதில் மிகுந்த கவனம் செலுத்தினார்கள்.

2. யாரிடம் அவர்களால் நேராக செல்ல முடியவில்லையோ அவரிடம் தங்கள் தோழர்களை கடிதம் கொடுத்து அனுப்பி வைத்தார்கள்.

3. அரசர்கள், முக்கிய பிரமுகர்கள், சமுதாயத் தலைவர்கள் இஸ்லாமை ஏற்பதில் நபி ﷺ அவர்கள் மிகுந்த ஆர்வம் காட்டினார்கள். இவர்கள் இஸ்லாமை ஏற்றால் அவர்களின் தலைமைக்கு கீழ் உள்ளவர்கள் விரைவாக இஸ்லாமை ஏற்க வாய்ப்புள்ளது என்பதால். இதற்கு பல ஆதாரங்கள் வரலாற்றில் உள்ளன.

4. தங்களிடம் ஒப்படைக்கப்பட்ட பணியை செய்து முடிப்பதில் ஸஹாபாக்கள் தங்கள் உயிரை துட்சமாக மதித்தார்கள். நபி ﷺ அவர்களின் கடிதங்களை எடுத்துக் கொண்டு தூர தூரமான பகுதிகளுக்கு சென்றார்கள். அவர்களில் சிலர். கொல்லப்பட்டனர். இருந்தும் அந்தப் பணியை சுமப்பதில் ஸஹாபாக்கள் தயக்கம் காட்டவில்லை.

5. இது, ஸஹாபாக்கள் அழைப்புப் பணியின் மகத்துவத்தை

விளங்கி இருந்ததையும் அல்லாஹ்விற்காக உயிரை அர்ப்பணம் செய்வதில் அவர்களுக்கு இருந்த ஆர்வத்தையும் நபி ﷺ அவர்களுக்கு கட்டுப்படுவதில் அவர்களுக்கு இருந்த முழு ஈடுபாட்டையும் காட்டுகிறது.

6. இந்த ஹதீஸ் நபித்துவத்தின் அடையாளங்களில் முக்கியமான ஒன்றாகும்.

7. யூதர்களும் கிறிஸ்த்துவர்களும் நபி முஹம்மது ﷺ அவர்களின் வருகையை அறிந்திருந்தார்கள். இன்னும் நபி ﷺ அவர்களை எதிர்பார்த்திருந்தார்கள்.

8. அவர்களில் அல்லாஹ்வையும் மறுமை வீட்டையும் அழியும் உலகத்தை விட தேர்ந்தெடுத்தவர்களுக்கு அல்லாஹ் நேர்வழியின் நற்பாக்கியத்தை அருளினான்.

9. நபி ﷺ அவர்கள் மன்னர்களிடம் கடிதங்களை அனுப்பும்போது ஒவ்வொரு மன்னருக்கும் தோழர்களில் பொருத்தமான ஒருவரை தேர்ந்தெடுத்து அனுப்பினார்கள். இது, பொறுப்புகளை அவற்றுக்கு தகுதியானவர் யார் என்று சோதித்து, பிறகு அவருக்கு கொடுக்க வேண்டும் என்பதை சுட்டிக் காட்டுகிறது.

10. திஹ்யாவின் துணிவும் தைரியமும் அர்ப்பணிப்பும் பொறுமையும் இங்கு நாம் மிகவும் கவனிக்க வேண்டியவை. அல்லாஹ் அவர்களை பொருந்தி கொள்வானாக!

11. இஸ்லாமிய அழைப்புப் பணியின் தூதை சுமந்து செல்பவர் அல்லாஹ்வைத் தவிர யாரையும் பயப்பட வேண்டியதில்லை.

12. ஓர் அழைப்பாளரின் உள்ளத்தில் அல்லாஹ்வின் பயம் மட்டுமே இருக்கும். மறுமையை முன்னோக்கியே அவர் இருப்பார். ஆகவே, சிகரங்களை தாண்டுவது அவருக்கு சிரமமல்ல.

13. மார்க்கத்தை எடுத்துச் சொல்வதிலும், அதைப் பரப்புவதிலும் அதன் பக்கம் மக்கள் எல்லோரையும் அழைப்பதிலும் உள்ளத்திற்கு மிகப் பெரிய மகிழ்ச்சியும் அமைதியும் முஸ்லிம்களுக்கு கண்ணியமும் இருக்கின்றன.

14. அழைப்பாளர் தான் யாருக்கு முன்னால் இருக்கிறோம், தன்னை சுற்றி எவ்வளவு முக்கியஸ்தர்கள் இருக்கிறார்கள் என்பதை எல்லாம் ஒரு பொருட்டாக எடுக்க மாட்டார். அது, அவரின் உள்ளத்தில் பயத்தையோ, தடுமாற்றத்தையோ, திகிலையோ அறவே ஏற்படுத்தாது. அவர் அல்லாஹ்வின் அழைப்பை எடுத்து சொல்வதால் அல்லாஹ்வின் கண்ணியத்தைக் கொண்டு கண்ணியம் பெற்றவராகவும் அல்லாஹ்வின் கம்பீரத்தைக் கொண்டு கம்பீரமாகவும் நின்று இஸ்லாமிய அழைப்பை மக்களுக்கும் மன்னர்களுக்கும் முன் வைப்பார்.

15. அழைப்பை யாருக்கு முன் அவர் வைக்கிறாரோ அவரின் பகட்டோ, படையோ, சபையோ, பணமோ, பதவியோ, எதுவும் அழைப்பாளரின் உள்ளத்தில் ஊசலாட்டங்களை உண்டாக்கி விடக்கூடாது.

16. நபி ﷺ அல்லாஹ்வின் தூதராக இருக்க, நபியவர்களின் தூதர்களாக ஸஹாபாக்கள் இருந்தார்கள். இது எத்தகைய மாபெரும் நற்பாக்கியம்.! அல்லாஹ் அதை ஸஹாபாக்களுக்கு

அவர்களின் தகுதிக்கு ஏற்ப வழங்கி இருந்தான்.

17. ஒரு தூதர், தான் யார் சார்பாக செல்கிறோம், எந்த செய்தியை எடுத்து செல்கிறோம் என்பதற்கு ஏற்ப அவர் கண்ணியம் பெறுகிறார். ஸஹாபாக்கள் நபி ﷺ அவர்களிடமிருந்து இஸ்லாமிய அழைப்பை, தவ்ஹீதுடைய அழைப்பை எடுத்து சென்றார்கள். இவ்வுலகில் நபி ﷺ அவர்களை விட கண்ணியமான ஒருவர் இருக்கிறாரா? இவ்வுலகில் இஸ்லாமிய அழைப்பை விட உயர்ந்த செய்தி வேறேதும் உண்டோ?

18. இஸ்லாம் மக்களை வெற்றியின் பக்கம் அழைப்பதற்கு வந்தது. மக்களை அழிப்பதற்காக அல்ல. ரோமர்கள் இஸ்லாமை ஏற்காமல் இருந்ததுடன் இஸ்லாமை ஏற்றவர்களை கொன்றனர். மேலும், அரேபிய தீபகற்பத்தை அவர்கள் கைப்பற்றி இருந்தனர். ஆகவே, ஸஹாபாக்கள் அவர்களுடன் போர் செய்தனர்.

19. ஆட்சியாளரும் முஸ்லிம்களும் அதிக கவனமும் அக்கறையும் செலுத்த வேண்டிய காரியம் அழைப்புப் பணியாகும்.

20. இன்று பல நாடுகளும் பெரும்பாலான முஸ்லிம்களும் அழைப்புப் பணியை கைவிட்டது மிகப் பெரிய கைசேதமும் சொல்ல முடியாத நஷ்டமும் ஆகும்.

21. நபி ﷺ அவர்களுக்கு வம்சத்தால் நெருக்கமானவரை ஹிர்கல் அழைத்தார். ஏனெனில், வம்சத்தால் தூரமானவரை விட அவர் நபியவர்களின் மறைவான, வெளிப்படையான பல விஷயங்களை அறிய அதிகம் வாய்ப்பு இருக்கிறது. (ஃபத்ஹ்)

22. அபூ சுஃப்யானின் தோழர்களை அவருக்கு பின்னால் அமரும்படி ஹிர்கல் செய்தார். காரணம், அபூ சுஃப்யான் பொய் கூறினால் அவரை பொய்ப்பிப்பதில் அவர்களுக்கு கூச்சம் வந்து அமைதியாகிவிடக் கூடாது. (ஃபத்ஹ்)

23. உங்கள் மூதாதையர்கள் கூறுவதை நீங்கள் விட்டுவிடுங்கள்! என்று கூறப்பட்டதன் காரணம், சிலை வணங்கிகள், கிறிஸ்த்துவர்கள் ஆகிய இவர்கள் எல்லோரும் வழிகேட்டில் தங்கள் மூதாதைகளையே பின்பற்றுகின்றனர்.. ((ஃபத்ஹ்)

24. பணிவானவர்கள்தான் மார்க்கத்தை பின்பற்றும் நற்பாக்கியம் பெறுவார்கள். பொறாமை, பெருமை உள்ள அகம்பாவம் பிடித்தவர்கள் அல்லர். இவர்கள் எதிர்ப்பதில்தான் பிடிவாதமாக இருப்பார்கள். அபூ ஜஹ்லைப் போன்று. (ஃபத்ஹ்)

25. நபிமார்கள் ரஸூல்மார்கள் மோசடி செய்ய மாட்டார்கள். ஒப்பந்தங்களை மீற மாட்டார்கள். ஏனெனில், அவர்கள் மறுமையை நாடியவர்கள். உலகத்தை தேடுபவன்தான் இந்த குற்றங்களை செய்வான். (ஃபத்ஹ்)

26. நான் நபியவர்களின் காலை கழுகுவேன் என்று ஹிர்கல் ஆரம்பத்தில் கூறியதில், நான் நபியவர்களை சந்தித்தால் ஆட்சியையோ பதவியையோ கேட்க மாட்டேன். எனக்கு அவர்களின் பணிவிடையால் பரகத் கிடைத்தால் போதும் என்று அவர் எண்ணுவதை அறியலாம். (ஃபத்ஹ்)

27. ஆனால், இறுதியில் அவர் மாறிவிட்டார். வழிகேட்டில் உறுதியாக இருந்து விட்டார். ஆட்சியின் மீது மோகம்

கொண்டுவிட்டார். ஆகவே, அவர் ஹிஜ்ரி எட்டாம் ஆண்டு முஸ்லிம்களிடம் போர் செய்ய முஃதா வந்தார். (ஃபத்ஹ்)

28. ஹிர்கல் ஹிம்ஸ் நகரத்தில் ரோமர்களின் மலிக் - மன்னராக இருந்தும் ரோம் நாட்டு மன்னருக்கு என்று நபி ﷺ அவர்கள் குறிப்பிடவில்லை. மாறாக, ரோம் நாட்டு அளீம் - மதிப்பிற்குரியவருக்கு என்று எழுதினார்கள். ஏனெனில், இஸ்லாம் வந்த பின்னர் இஸ்லாமிய சட்டப்படி அவர் மன்னராக நீடிக்க முடியாது. இருந்தும் குறைந்தபட்சம் அளீம் என்ற வார்த்தையை எழுதி கண்ணியப்படுத்தினார்கள். அவரை தனக்கு நெருக்கமாக்குவதற்காக இப்படி செய்தார்கள். (ஃபத்ஹ்)

இஸ்லாம் வந்த பின்னர் நபியவர்கள் ஒருவரை ஆட்சியில் அமரவைத்தால் மட்டுமே அது அங்கீகரிக்கப்படும். (உம்தா) ஹிர்கல் என்று அவருடைய பெயரை மட்டும் கூறவில்லை. காரணம்

அல்லாஹு தஆலா கூறுகிறான் :

﴿ادْعُ إِلَى سَبِيلِ رَبِّكَ بِالْحِكْمَةِ وَالْمَوْعِظَةِ الْحَسَنَةِ﴾

பொருள் : உமது ரப்புடைய மார்க்கத்தின் பக்கம் ஞானத்தைக் கொண்டும் அழகிய உபதேசத்தைக் கொண்டும் அழைப்பீராக! (அல்குர்ஆன் 16 : 125)

29. நாம் பிற மத மக்களுக்கு கடிதம் எழுதினாலும் பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் ஆரம்பமாக கூற வேண்டும். (உம்தா)

30. கடிதம் எழுதுபவர் முதலில் தனது பெயரையும் அடுத்து

யாருக்கு எழுதுகிறாரோ அவரது பெயரையும் எழுத வேண்டும். ஸலஃப்களில் பலர் இதற்கு மாற்றமாக எழுதுவதை வெறுக்கிறார்கள். சிலர், இதில் தவறில்லை என்று சலுகை செய்கிறார்கள். (உம்தா)

31. முஸ்லிம் அல்லாதவர்களுடன் அல்லாஹ்வின் பெயர் பதிக்கப்பட்ட நாணயங்களை பரிமாறுவது தவறில்லை. குர்ஆன் வசனமுள்ள கடிதத்தை நபி ﷺ அவர்கள் அனுப்பியதிலிருந்து இதை அறியலாம். (உம்தா)

32. கபருல் வாஹித் - ஸஹீஹான அறிவிப்பாளர் ஒருவர் அறிவிக்கும் ஹதீஸின் படியும் அமல் செய்வது கட்டாயம் என்பதை இந்த நிகழ்விலிருந்து அறிய முடிகிறது. அப்படி இல்லை என்றால் திஹ்யாவை மட்டும் நபி ﷺ அவர்கள் அனுப்பி இருக்க மாட்டார்கள். இன்னும் இந்த சட்டத்திற்கு பல ஹதீஸ்கள் ஆதாரமாக உள்ளன. (உம்தா)

33. மாற்றார்களுக்கு நாம் முதலில் ஸலாம் கூறக் கூடாது என்று கூறுபவர்கள் இந்த அறிவிப்பை ஆதாரமாக கூறுகிறார்கள். ஷாஃபிஈ இன்னும் அதிகமான அறிஞர்களின் கூற்று இதுவாகும். இன்னும் அறிஞர்களின் ஒரு கூட்டம் மாற்றார்களுக்கு பொதுவாக - ஆரம்பமாக, அல்லது பதில் கூறும்போது ஸலாம் கூறுவது கூடும் என்று கூறுகிறார்கள். இன்னும் ஒரு கூட்டம், இணக்கத்தை, அன்பை ஏற்படுத்த அல்லது வேறு தேவைக்காக கூறுவது கூடும் என்று கூறுகிறார்கள். பித்அத் வாதிகளுக்கு ஸலாம் கூறக்கூடாது, இன்னும் அவர்களின் ஸலாமுக்கு பதிலும் கூறக் கூடாது, இன்னும் பெரும் பாவம் செய்துவிட்டு, தவ்பா

செய்யாதவருக்கு ஸலாம் கூறக் கூடாது, பதில் ஸலாமும் கூறக் கூடாது என்று புகாரி இன்னும் பல அறிஞர்கள் கூறுகிறார்கள். அதற்கு கஅப் இப்னு மாலிக் உடைய சம்பவத்தை ஆதாரமாக கூறுகிறார்கள். அதில் ரஸூலுல்லாஹ் ﷺ எங்களிடம் பேசுவதை விட்டும் தடுத்திருந்தார்கள் என்று வந்துள்ளது. (உம்தா)

34. நமது நபியை ஈமான் கொண்ட வேதக்காரர்களுக்கு இரு மடங்கு கூலிகள் உண்டு. (உம்தா)

35. போருக்கு முன்பாக தஅவா கொடுக்க வேண்டும். தஅவா கொடுக்காமல் போரை ஆரம்பிக்கக் கூடாது. ஏற்கனவே அவர்களுக்கு அழைப்பு எட்டியிருந்தாலும் மீண்டும் அழைப்பு கொடுப்பது விரும்பத்தக்கதாகும். (உம்தா)

36. வம்சத்தால் உயர்ந்தவர்கள் முஸ்லிம்களின் காரியங்களில், மார்க்க பொறுப்புகளில் முன்னிலைப்படுத்தப்பட வேண்டும் (அவர்களிடம் தகுதி இருந்தால்). ஆகவேதான் கிலாஃபத் குறைஷிகளிடம் இருக்க வேண்டும் என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். தங்கள் குடும்ப கண்ணியத்தை கெடுக்க அவர்கள் விரும்ப மாட்டார்கள். (உம்தா)

37. மார்க்கத்தில் கட்டளையாக ஒன்று இருப்பதற்கு தனிப்பட்ட வினைச் சொல் இருக்கிறது. அவர் உங்களுக்கு எதை கட்டளையிடுகிறார் என்று ஹிர்கல் கேட்க அபூ சுஃப்யான், உஃபுதூ அல்லாஹ என்ற வார்த்தையை பயன்படுத்தி பதில் தருகிறார். இத்தகைய வார்த்தைக்கு அரபியில் ஸீகத்துல் அம்ர் என்று சொல்லப்படும். (உம்தா)

38. முக்கிய பிரமுகர்களுக்கு கடிதம் எழுதும்போது எழுத்து சுருக்கமும் கருத்தாழமும் இருக்க வேண்டும். நபியவர்களின் கடிதத்தில் உள்ளது போன்று. (உம்தா)

39. மாற்றார்களின் நாட்டுக்கு பயணம் செல்வது கூடும். (உம்தா)

40. குர்ஆன் வசனங்கள் எழுதி மாற்றார்களுக்கு கடிதம் எழுதலாம். (உம்தா)

41. பிறர் நேர்வழி பெற ஒருவர் தடையாக இருந்தால் அவர் குற்றவாளியாக கருதப்படுவார். (உம்தா)

42. எல்லா சமுதாய மக்களிடமும் பொய் என்பது வெறுக்கப்பட்டதும் குறையும் ஆகும். (உம்தா)

43. எதிரி, தனது எதிரியின் மீது பொய் கூறுவதற்கு வாய்ப்பு இருப்பதால் கவனமாக இருக்க வேண்டும். (உம்தா)

44. ரஸூல்மார்கள் மிக கண்ணியமான வம்சத்தில் அனுப்பப்படுவார்கள். காரணம் வம்சத்தால் சிறப்பானவராக இருப்பவர் உண்மை அல்லாத ஒன்றை தனக்கு எடுக்க மாட்டார். (உம்தா)

45. ரஸூலுல்லாஹ் ﷺ உடைய உண்மையும் அவர்களின் அடையாளமும் வேதக்காரர்களுக்கு உறுதியாக தெரிந்திருந்தன. அவர்களில் யார் இஸ்லாமை ஏற்கவில்லையோ அதற்கு காரணம் பொறாமை. அல்லது தனது பதவி போய்விடும் என்ற பயம் ஆகும். (உம்தா)

46. அரபுகளின் நினைவாற்றல் மற்ற மக்களைப் போன்றதல்ல.

நீண்ட நீண்ட கவிதைகளையும் வரலாறுகளையும் ஹதீஸ்களையும் மிகவும் எளிதாக அவர்கள் மனனம் செய்துவிடுவார்கள். இதுவும் ஒரு காரணம் இறுதி தூதர் அரபுகளில் அனுப்பப்பட்டதற்கு என்று அறிஞர்கள் கூறுகிறார்கள்.

47. இஸ்லாம் சமாதானத்தையும் அமைதியையும் விரும்புகிறது. ஆகவே, உடன்படிக்கையின் குறிப்புகளில் முஸ்லிம்களுக்கு சில சிரமம் இருந்தும் நபி ﷺ அவர்கள் அதை ஏற்றுக்கொண்டார்கள். காஃபிர்கள் உடன்படிக்கையை மீறுகின்ற வரை நபி ﷺ அவர்கள் உடன்படிக்கையை முறிக்க வில்லை.

48. ஸஹாபாக்கள் மிகப் பணிவானவர்களாகவும் மிகப் பொறுமையாளர்களாகவும் இருந்தார்கள். பலவீனர்கள் பின்பற்றுகிறார்கள் என்று கூறியதிலிருந்து இதை அறியலாம்.

49. ஸஹாபாக்கள் மார்க்கத்தில் உறுதியானவர்கள், எத்தகைய துன்பத்தை அனுபவித்த போதும் இஸ்லாமை விட்டு வெளியேறவில்லை, வெளியேற மாட்டார்கள் என்பதை அக்கால காஃபிர் எதிரிகளும் அறிந்திருந்தனர். இன்று இந்த விஷயம் பல முஸ்லிம் அறிஞர்களுக்கு(?)க் கூட தெரிவதில்லை. ஸஹாபாக்கள் மார்க்கத்தில் பலவீனமாக இருந்தார்கள் என்று கத்துகின்றனர்.

50. நபி ﷺ அவர்கள் என்ன கட்டளையிடுகிறார்கள் என்று ஹிர்கல் கேட்க, அதற்கு அபூ சுஃப்யான் கூறிய பதிலில் உள்ள அமல்களுக்கு நபி ﷺ அவர்கள் மிக அதிகம் முக்கியத்துவம் கொடுத்தார்கள் என்பதை அறிய முடிகிறது. அவை : தவ்ஹீது,

ஷிர்க்கை விடுவது, தொழுகை, ஸகாத், உண்மை, ஒழுக்கம், உறவுகளைப் பேணுதல் ஆகும். (ஷைக் காலித் அல்முஸ்லிஹ் - https://almosleh.com/ar/102779)

51. நபி ﷺ அவர்களின் நற்குணத்திற்கு அவர்களின் எதிரிகளே சாட்சிகளாக இருந்தனர். அபூ சுஃப்யான் எதிரியாக இருந்தும் நபி ﷺ அவர்களைப் பற்றி எந்த குறையையும் அவரால் கூற முடியவில்லை. இது ஒருவர் சிறந்த நற்குணமும் உண்மையும் உடையவர் என்பதற்குரிய சாட்சிகளில் முக்கியமானதாகும். இவ்வாறு பேராசிரியர் அப்துல்லாஹ் பெரியார்தாசன் தனது உரையில் ஒரு முறை கூறியதை நான் செவியுற்றேன்.

அல்லாஹ் மிக அறிந்தவன்! சரியான கல்வி அல்லாஹ்விடமே உள்ளது.

--------------------




# DARUL HUDA

Quality Islamic Book Publishers

**மிகவும் நேர்த்தியான முறையில் அச்சடிக்கப்பட்ட குர்ஆன் பிரதிகள் மற்றும் ஆதாரப்பூர்வமான தரமிக்க இஸ்லாமிய நூல்கள்.**

**INDIAN BANK | DARUL HUDA** | A/C No: **6724227449**,

IFS Code : IDIB000M016, Branch : Mannady

## அல்குர்ஆன்

3. அல்குர்ஆன் அரபி (Executive Hard bound, Paper 40gsm, Size 14x21cm)
4. அல்குர்ஆன் அரபி (Executive Hard bound, Paper 60gsm, Size 18x24cm)

## அல்குர்ஆன் தமிழாக்கங்கள்

1. தர்ஜமதுல் குர்ஆன் பி அல்தஃபில் பயான் (Hard Bound 48 gsm)
2. தர்ஜமதுல் குர்ஆன் பி அல்தஃபில் பயான் (Hard Bound 60 gsm)
3. புகழ்மிகு குர்ஆன் போற்றத்தகு தமிழாக்கம் (Hard Bound)
4. மகத்துவமிகு குர்ஆன் மாண்புமிகு தமிழாக்கம் (Hard Bound)
5. தெளிவுமிகு குர்ஆன் தெவிட்டாத தமிழாக்கம் (HB 28 gsm, 18x12cm)
6. மேன்மைமிகு குர்ஆன் எளிமைமிகு தமிழாக்கம்
7. இறைவேதம் அல்குர்ஆன் தமிழாக்கம் (Soft Bound)
8. சங்கைமிகு குர்ஆன் சிறப்புமிகு தமிழாக்கம் (Hard bound)
9. கண்ணியமிகு குர்ஆன் இனிமைமிகு தமிழாக்கம் (Soft Bound)
10. உயர்வுமிகு குர்ஆன் உன்னத தமிழாக்கம் (Hard Bound 28 gsm)
11. அல்குர்ஆன் சொல்லுக்குச் சொல் தமிழாக்கம் - பாகம் 1
    (அல் பாதிஹா (01) முதல் அத் தவ்பா (9) வரை)
12. அல்குர்ஆன் சொல்லுக்குச் சொல் தமிழாக்கம் - பாகம் 2
    (சூரா யூனுஸ் (10) முதல் அல் அன்கபூத் (29) வரை)
13. அல்குர்ஆன் சொல்லுக்குச் சொல் தமிழாக்கம் பாகம் 3
    (சூரா அர்ரூம் (30) முதல் அந்நாஸ் (114) வரை)

14. அல்குர்ஆன் சொல்லுக்குச் சொல் தமிழாக்கம் (அம்ம ஜுஸ்வு)

15. அல்குர்ஆன் சொல்லுக்குச் சொல் தமிழாக்கம் (ஆலு இம்ரான்)

# தமிழ் புத்தகங்கள்

1. தொழுகை முறை
2. நோன்பு
3. ஹிஜாப் - முஸ்லிம் மங்கையரின் மேன்மை
4. அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஆ கொள்கைகள்
5. அழைப்புப்பணி - அழைப்பாளர்
6. திருமண வாழ்த்து, காலை மாலை திக்ருகள், இஸ்திகாரா துஆ
7. ஸகாத் - வழிமுறைகள், சட்டதிட்டங்கள்
8. இறுதிப் பேருரை (முழுத் தொகுப்பு)
9. இஸ்லாமியக் கொள்கை. வினா - விடைகள்
10. தடுக்கப்பட்டவை
11. இறைநெறி கூறும் இயற்கைக் கடமைகள்
12. அல்குர்ஆன் துஆக்கள்
13. குர்ஆன் ஹதீஸ் கூறும் பிரார்த்தனை
14. நம்பிக்கையின் அடிப்படைகள்
15. இல்லங்களை அச்சுறுத்தும் அபாயங்கள்
16. இஸ்லாமிய ஒளியில் குழந்தை வளர்ப்பு
17. மூன்று அடிப்படைகள்
18. அலட்சியமாகக் கருதப்படும் ஆபத்தான குற்றங்கள்
19. தஃலீமுல் குர்ஆன் (தஜ்வீது வழிகாட்டி)
20. அத்தவ்ஹீத்
21. அன்றாடம் கடைப்பிடிக்க 1000 சுன்னத்துகள்
22. வெற்றிக்கு வழி
23. அழைப்புப் பணி கேள்வி-பதில்
24. உம்ரா வழிகாட்டி (ஆர்ட் பேப்பர் 18x12 cm)
25. அழகிய துஆக்கள் மற்றும் ருக்யாக்கள் (10.5x14 cm)
26. முன்மாதிரி முஸ்லிம் குடும்பம்
27. இயற்கை மதம்
28. ஹிஸ்னுல் முஸ்லிம் (மஸ்னூன் துஆக்கள்)
29. இஸ்லாமின் இறைக்கோட்பாடு
30. மீளாப்பயணம் (ஜனாஸாவின் சட்டங்கள்)
31. இப்னு தைமிய்யா வாழ்க்கை வரலாறு
32. முன்மாதிரி முஸ்லிம்
33. ஹிஸ்னுல் முஸ்லிம் (21x14 cm)
34. ஹஜ். உம்ரா வழிகாட்டி

35. அழகிய துஆக்கள் மற்றும் ருக்யாக்கள் (21x14 cm Single Colour)
36. தப்சீர் முதல் ஜுஸ்வு
37. முன்மாதிரி முஸ்லிம் பெண்மணி
38. அர்ரஹீக் அல்மக்தூம் (18x24 cm)
39. அழகிய துஆக்கள் மற்றும் ருக்யாக்கள் (14x21 cm Full Colour)
40. இறைமார்க்கம் இறைவேதம் ஓர் அறிமுகம்
41. இஸ்லாம் நீங்கள் அறியவேண்டிய மார்க்கம்
42. சான்றோர்கள் பாடசாலை (பாகம் 1)
43. இறைவனுக்கு உருவம் கொடுக்க முடியுமா?
44. கவலைப்படாதே!
45. இயேசுவின் அழைப்பு
46. ஒரு தெய்வமா? பல தெய்வமா?
47. வஸிய்யத்தீ
48. ரஹ்மத்தான ரமழான்
49. இஸ்லாமிய சிறப்பு கல்வி வகுப்பு
50. உலக முடிவு
51. இறைத்தூதரின் தூய வரலாறு
52. அல்குர்ஆன் பாக்கியம் நிறைந்த வேதம்
53. தூய திருகலிமா
54. அத்தஹாரா - தூய்மை - ஃபிக்ஹ்
55. தொழுகை - ஃபிக்ஹ்
56. ஸகாத் - ஃபிக்ஹ்
57. ஹஜ் - ஃபிக்ஹ்
58. நோன்பு - ஃபிக்ஹ்
59. இல்முத் தஜ்வீத்
60. இஸ்லாமில் சொத்துரிமை சட்டங்கள்
61. நபியவர்களின் சரியான தொழுகை முறை
62. முஸ்லிம் பெண்மனியின் நற்குணங்கள் பகுதி 1
63. லும்அத்துல் இஃத்திகாத்
64. ஹதீஸ் கலை இமாம்களின் கொள்கை
65. ஷர்ஹுஸ் ஸுன்னா - பர்பஹாரி
66. உஸுலுஸ் ஸுன்னா - அஹமது இப்னு ஹன்பல்
67. அல் அகீததுல் வாஸிதிய்யா - இப்னு தைமிய்யா
68. அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஆ கொள்கை - உஸைமீன்
69. அல்குர்ஆன் விரிவுரையின் சில அடிப்படைகள் - உஸைமீன்
70. அல்மத்கல் - விரிவான கொள்கை விளக்க நூல்

# ENGLISH BOOKS

1. The Ideal Husband & The Ideal Wife
2. 33 Ways Developing Inner Fear
3. 40 Guidelines & Dangers That Threaten
4. Situations & Questions - Answers
5. Prohibited & Problems And Solutions
6. Aqeeda Attawheed
7. The True Message of Jesus Christ
8. Fortification of The Muslim
9. Funeral Rites In Islaam
10. Explanation of Aayat Alkursi
11. Gateway To Arabic, Starter Book, (1-5 Parts) each book
12. Search for Happiness
13. What Must Be Known About Islaam?
14. The Sunnah Out Spread Flags of...
15. The Book of Tawheed
16. The Ideal Muslim
17. Ideal Muslimah
18. Noble Quran in The English Language
19. Arraheeq Al Makhtoom
20. About Islam
21. Glorious Quran
22. Precious Invocations and Ruqyas (21x14 cm)
23. Dua and Ruqya from Quran and Sunnah (10.5x14 cm)
24. The Quran with English Meanings and Notes
25. English Meanings and Notes of The Quran

----------------------